# திரிபுரி முதல் கல்கத்தா வரை



"நவசக்தி" உதவி ஆசிரியன்

ஸ்ரீ சக்திதாஸன் சுப்பிரமணியன்

தொகுத்தது.

அல்லயன்ஸ் கம்பெனி

மயிலாப்பூர், சென்னை.



0-6-0

# ஹரிபுரா காங்கிரஸ் வைபவம்

(" தினமணி " ஆசிரியர்
ஸ்ரீ. டி. எஸ். சொக்கலிங்கம், எம். எல். ஏ.,
அவர்கள் தொகுத்தது)

— ஆப்டோன் படங்களுடன் —

| | | |
|---|---|---|
| மலிவான பதிப்பு | அணா | 6 |
| கிளேஸ் காகிதப் பதிப்பு | ,, | 10 |



சாது அச்சுக்கூடம், சென்னை
(1939511-21-1)



# திரிபுரி
# காங்கிரஸ் வைபவம்

---

## ராஷ்டிரபதி ஊர்வலம்

**வா**த்தியங்கள் கோஷிக்கின்றன. முரச சப்தம் முழங்குகிறது. விஷ்ணுதத் நகரின் பள்ளத்தாக்கிலே, மலைச்சாரலிலே நர்மதை நதியின் கரையோரத்திலே யாண்டும் இவ்வோசையின் எதிரொலி கேட்கிறது. ஐம்பத்திரண்டு யானைகள் ஒன்றன்பின் ஒன்றாக வருகின்றன. முதலிலே வருகிறது பெரியதொரு யானை. அதன் மேலே முதன்முதல் காங்கிரஸ் தலைவரின் படம். இப்படியாக ஒவ்வொரு யானை மீதும் அடுத்த அடுத்த காங்கிரஸ் தலைவர்களின் படம். இறுதியாக ரதத்திலே ராஷ்டிரபதி சுபாஷ்

சந்திரபோஸின் உருவப் படம். தொண்டர் படை ஒன்று செல்கிறது. மலை மீதும் மரங்கள் மீதும் மக்கள் ஏறி நின்று ஊர்வலத்தைக் கண்ட காட்சி உள்ளத்தைக் கொள்ளை கொள்வது. இவ்விதமாக ஊர்வலம் ஜண்டா சதுக்கத்தை வந்தடைந்தது. ஏராளமான மக்கள் கூடி நின்றார்கள்.

## தேசியக்கொடி ஏற்று விழா

ஜண்டா சதுக்கத்திலே ஒரு லக்ஷம் மக்கள் கூடினார்கள். எழுபத்தைந்து அடி உயரமுள்ள துவஜஸ்தம்பத்தின் மீது பண்டித ஜவாஹர்லால் நேரு தேசியக் கொடியை ஏற்றி வைத்தார். நேரு பேசியது வருமாறு :—

தேசியக்கொடி என்பது ஒரு துணிதான். ஆயினும் ஒவ்வொரு நாட்டிலுமுள்ள கோடிக்கணக்கான மக்கள் அக்கொடியை வணக்கஞ் செய்கிறார்கள். கோடிக்கணக்கான மக்கள் அக்கொடியின்பொருட்டு மகிழ்ச்சியுடன் மனமுவந்து உயிரைப் பலி கொடுத்திருக்கிறார்கள். ஏன்? தேசத்தின் சுதந்திரத்தினையும் கௌரவத்தையும் குறிப்பது தேசியக் கொடி. நாட்டு மக்களுக்குப் பாதுகாப்பளிப்பது தேசியக் கொடி. நம்முடைய இந்திய நாட்டிலே தீர்க்கமான ஆலோசனையின் பேரிலேயே தேசியக் கொடி அமைக்கப் பட்டது. இந்த நாட்டிலே வசிக்கும் ஒவ்வொருவருக்கும் அந்தக் கொடி பிரதிநிதியாய் விளங்குகிறது. நம்முடைய நாட்டிலே இன்னொரு கொடியிருக்கிறது. அதுதான் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் யூனியன் ஜாக் கொடி. அது நம்முடைய கொடியன்று. நாம் அதைக் கிரேட் பிரிட்டனில் கௌரவிக்க விரும்புகிறோம். தயாராயிருக்கிறோம். ஆனால் இந்தியாவிலே நாம் யூனியன் ஜாக் கொடியினை நம்மைப் பந்தித்து வைத்திருக்கும் அடிமைச் சின்னமாகக் கருதுகிறோம். ஆகவே அதை எதிர்க்கிறோம்; எதிர்த்தல் வேண்டும்.

## காங்கிரஸ் வைபவ ஆரம்பம்

ஒரே மனித சமுத்திரம். எங்கே பார்த்தாலும் மனிதத்தலைகள். சுமார் இரண்டு லக்ஷம் ஜனங்களின் கூட்டம். ஆகாயத்திலே நக்ஷத்திரங்கள் மினுக்குமினுக் கென்று பிரகாசித்தன. நெருக்கடியான சந்தர்ப்பத்திலே கூடியுள்ள காங்கிரஸ் மகாசபையின் காட்சியை நக்ஷத்திரங் கள் விண்ணில் நின்று கவனிப்பது போன்றிருந்தது அக் காட்சி. எங்கும் மலைச்சரிவு ! இயற்கைக் காட்சி ! மரத்தின் மீதும் மலையின்மீதும் மக்கள் ஏறிநின்று காங்கிரஸைக் கவனித்தார்கள். பெரியதொரு வியவசாயியின் உருவ மொன்று ஆண்டு நிறுத்தப்பட்டிருந்தது. வியவசாயிகள் விழிப்புணர்ச்சியை அது அறிவிப்பதாயிருந்தது. ராஷ்டிரபதி சுபாஷுக்கு உட்கார முடியாததனால் காங்கிரஸ் மகாநாட்டில் அவர் தலைமை வகிக்கவில்லை. ஆதலினாலே மௌலானா அபுல்கலாம் அஸாது தலைமை வகித்தார். வந்தேமாதர கோஷத்துடன் காங்கிரஸ் ஆரம்பமாயிற்று. வரவேற்புக் கமிட்டித் தலைவரான சேத் கோவிந்ததாஸ் ஹிந்துஸ்தானியில் வரவேற்புக் கமிட்டிப் பிரசங்கத்தைப் படித்தார். ராஷ்டிரபதியின் தலைமைப் பிரசங்கத்தினை ஆசாரிய நரேந்திர தேவர் ஹிந்துஸ்தானியிலும், சரத் சந்திரபோஸ் இங்கிலீஷிலும் படித்தனர்.

## வரவேற்புப் பிரசங்கம்

திரிபுரத்தில் காங்கிரஸ் பிரதிநிதிகளையும் பிறரையும் வரவேற்று, சேத் கோவிந்ததாஸ் பேசினார். அவர் பேச்சின் சாரம் வருமாறு :—

எல்லா வசதிகளும் ஏராளமாக அமைந்துள்ள கூர்ஜர மாகாணத்தில், சென்ற வருஷம் நீங்கள் அருமையாக உபசரிக்கப்பட்டீர்கள். இவ்வருஷம் காடும் மலையும் நிறைந்

துள்ள மகாகோசலத்தில் நீங்கள் கூடியிருக்கிறீர்கள். இங்கு உபசரிப்பு அவ்வளவு விசேஷமாக இராது. அதனால் நீங்கள் எங்களுடைய அன்பைக் குறைவாக மதிக்கமாட்டீர்கள் என நம்பியிருக்கிறோம். நீங்கள் எந்த ஸபையின் பிரதிநிதிகளாக இங்கு வந்திருக்கிறீர்களோ அந்தக் காங்கிரஸ் மகாசபையிடம் எங்களுக்கு உறுதியான நம்பிக்கையிருக்கிறது. ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன் ஸ்ரீராமர் இம்மாகாணத்துக்கு வந்தபோது இக்காட்டிலிருந்த சபரி அவருக்குக் காட்டுப் பழங்களைக் கொடுத்து உபசரித்தாள். அவ்விதமே ஏழைகளாகிய எங்களின் அற்ப உபசரிப்பைப் பெரிதாகக் கருதிக் குறைகள் பலவற்றையும் பொறுத்தருளப் பிரார்த்திக்கிறோம்.

## விஷ்ணுதத்த நகரம்

காட்டிலிருந்து கிடைத்த மரங்களையும் மூங்கிலையும் கொண்டு இந்த நகரத்தை அமைத்திருக்கிறோம். காலஞ்சென்ற பண்டித விஷ்ணுதத்த சுக்லா இம்மாகாணத்திற்கு முதல் தலைவர். அவரது பெயரை இந்நகருக்கு வைத்திருக்கிறோம். 1920-ஆம் வருஷத்தில் மத்திய மாகாணத்துக்குக் காங்கிரஸை அழைத்தபோது காலஞ்சென்ற விஷ்ணுதத்தர் ஜபல்பூரில் சபையைக் கூட்ட விசேஷ முயற்சி செய்தார். ஆனால் கடைசியில் அது நாகபுரியில் கூடியது. நாகபுரி காங்கிரஸ் கூட்டத்திலிருக்கையில் பண்டிதர் உயிர்விட்டார். அவரை நாங்கள் மறக்கமுடியாது. ஜபல்பூரில் காங்கிரஸை நடத்த அவர் கொண்டிருந்த ஆவலையும் நாங்கள் மறக்கமுடியாது. ஆகவே இக்காங்கிரஸ் நகருக்கு விஷ்ணுதத்த நகரம் எனப் பெயரிட்டோம்.

# பாஷாவாரி மாகாணம்

1920-ஆம் வருஷத்தில் நாகபுரி காங்கிரஸில் பாஷாவாரி யாக மாகாணங்கள் பிரிக்கப்பட்டன. ஹிந்துஸ்தானி பேசும் பிரதேசங்களை ஒன்றாகச் சேர்த்து, மத்திய மாகாண ஹிந் துஸ்தானி மாகாணம் என அழைத்தார்கள். 1930-ஆம்வருஷ சத்தியாக்கிரஹ இயக்க காலத்தில் இதற்குப் பழைய பெய ரான மஹாகோசலம் என்ற பெயர் வைக்கப்பட்டது. இம் மாகாண வாசிகள் ஒத்துழையாமைக் காலத்திலும், சட்ட மறுப்புக் காலத்திலும தீவிரமாகக் கலந்துழைத்தார்கள். நாக புரியில் வெற்றி பெற்ற கொடி சத்தியாக்கிரஹம் ஜபல்பூரில் தான் ஆரமபிககப்பட்டது. வன சத்தியாக்கிரஹம் இம்மாகா ணத்தவர் விருப்பப்படிதான் ஆரம்பிக்கப்பட்டது. சட்ட சபை வேலையிலும் இம்மாகாணம் பின்வாங்கவில்லை. 1923-ல் சுயராஜ்யக் கட்சி ஏற்பட்டு மூன்று வருஷங்கள் இங்கு மநதிரிசபை அமைக்கமுடியாதபடி வழி தேடினோம். 1926-ஆம் வருஷத்தில் மற்ற ஜில்லாக்கள். பரஸ்பர ஒத்துழைப்பில் இறங்கியபோது, மஹாகோசலம் காங்கிரஸ் கொடியைச் சற்றும் இறக்காமல் தூக்கிப் பிடித்து நின்றது. தேர்தலுக்குப்பின் பண்டித மோதிலால் மஹாகோசலத்தை விசேஷமாகப் புகழ்ந்ததை நாங்கள் எப்போதும் பெருமை யாகப் பாராட்டுவோம்.

சைமன் கமிஷன் வந்தபோது மஹாகோசல நிலச் சுவான்கள் ஒன்றுகூடி ஒருவரும் வேண்டாத அந்தக் கமிஷ னைப் பஹிஷ்கரிக்க முடிவு செய்தது இப்போதும் எங்கள் நினைவிலிருக்கிறது. இவற்றை யெல்லாம் எதற்காகச் சொன்னேனென்றால் உபசரிப்பு முதலிய துறைகளில் எங்களிடம் குறையிருந்தாலும், காங்கிரஸ் பக்தியில் பிற-

ருக்கு இம்மாகாணத்தினர் பின்வாங்காரென்பதைக் காட்டுவதற்காகவே யாகும்.

ஹரிபுரா காங்கிரஸ் உபசரணைக் கமிட்டித் தலைவரைப் போல நான் இவ்வளவோடு முடித்துவிட எண்ணினேன். ஆனால், நாட்டில் சில வாரங்களாக ஏற்பட்ட நிலைமையாலும் சர்வதேச நிலைமையாலும் சில வார்த்தைகள் அதிகமாகச் சொல்லவேண்டியிருக்கிறது.

## உலக நெருக்கடி

உலகில் இப்போது நெருக்கடியான நிலை ஏற்பட்டிருக்கிறது. ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் சில்லரை யுத்தங்கள் நடக்கின்றன. எந்தத் தினத்திலும் ஒரு மஹா யுத்தம் ஏற்பட்டு விடலாம். இந்தியா அதிலிருந்து விலகி நிற்க விரும்பினாலும் அது விடப்போவதில்லை.

## இந்தியா தன்னைத்தானே காத்துக்கொள்ள வேண்டும்

இம்மாதிரியான நிலைமையில் பிரிட்டன் இந்தியாவை எவ்வளவு தூரம் காக்க இயலுமென்பது சந்தேகமாக இருக்கிறது. இந்தியா தன்னைத் தானே காத்துக்கொள்ள வேண்டியிருக்கும். தனது இராணுவத்தின் மீதும் தனது அயல்நாட்டு முறைமீதும் பூரண ஆதிக்கமும் கட்டுப்பாடு செய்யும் அதிகாரமும் இந்தியாவுக்கு ஏற்படாதவரை, இந்தியா தன்னைத் தானே பாதுகாத்துக்கொள்ள முடியாது. இதனால் இந்தியாவின் தற்காப்புப் பிரச்னையை அதன் சுயேச்சைப் பிரச்னையிலிருந்து பிரிக்க முடியாதென்பது வெளிப்படை.

ஜெர்மனியும், ஜப்பானும், இத்தாலியும் தமது அதிகமாகிவரும் ஜனத்தொகைக்கு நிலம் பெறுதற்காகச் சண்டையிலிறங்கத் தீர்மானங் கொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது. இந்நிலையிலிருந்து பார்த்தால் இந்தியாவுக்குத்தான் இத்தேவை அதிகமாக இருக்கிறது. இந்தியாவின் ஜனத்தொகை

துரிதமாகப் பெருகிவருகிறது. ஆனால், இதரதேசங்கள் இந்தியரை நுழையவொட்டாதபடி தடுத்து வருகின்றன. ஒரு நூற்றாண்டாக அயல் நாடுகளில் ஏராளமாக இந்தியர் குடியேறித் தங்களது நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்து, அவற்றை மனிதர் வசிக்கத் தகுதியுள்ளன வாக்கியிருக்கின்றனர். இந்தத் தேசங்களில் கூட இந்தியர் அமைதியுடனும் சமத்துவத்துடனும் வாழ அனுமதிக்கப் படவில்லை. ஸான்ஸிபாரில் கிராம்பு வியாபாரப் பிரச்னை சிறிது காலத்திற்கு முன்புதான் தீர்க்கப்பட்டது. கேனியா பீடபூமிகளை எந்தத் தேசத்தவராயினும் வெள்ளைக்காரர் கள் வாங்கிக்கொள்ளலாம். ஆனால் அவற்றைக் கறுப்பு மனிதர் வாங்கக்கூடாது. வெள்ளைக்காரர் பிரிட்டிஷ் பிரஜை களாக இலலாமலிருக்கலாம். இதைப்பற்றி அக்கரையில்லை யாம். இந்தியர் பல வருஷங்களாக அங்கு வசித்திருக் கின்றனர். பிரிட்டிஷ் பிரஜைகளெனக் கருதப்படுகின்றனர். இப்படியிருந்தும் இந்தியருக்குக் கெனியா பீடபூமிகளை வாங்க உரிமை கிடையாதாம். இங்கிலாந்து தங்கநிகாவை ஜெர்மனிக்குத் திருப்பிக் கொடுக்கும் பேச்சைக்கூடச் சகித் திருக்கமுடியும். ஆனால் தென்னாப்பிரிக்காவிலும் கிழக்காப் பிரிக்காவிலும் தன் பிரஜைகளைப் பாதுகாக்க அதனால் இயலவில்லை. சென்ற வருஷம் பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியா வின் சார்பாகத் தென்னாப்பிரிக்காவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டனர். இது இந்தியாவின் வியாபார நலத்திற்கு விரோதமானது. இது மத்திய சட்டசபையின் சம்மத மின்றியும் செய்ததாகும்.

## கடல்கடந்த இந்தியர் துயரம்

தென்னாப்பிரிக்கா யூனியனிலுள்ள உட்பிரதேச மந்திரி நேடாலிலும், டிரான்ஸ்வாலிலும் வசிக்கும் இந்தியர்களை

ஒதுக்கிவிடச் சட்டம் கொண்டுவரப்போவதாக அன்றொரு நாள்தான் குறிப்பாகக் கூறினார். இலங்கை, பிஜி, மலேயா, பிரிட்டிஷ் கயானா இந்தப் பிரதேசங்களிலுள்ள இந்திய மக்களும் தொடர்ந்து பல கஷ்டங்களையே அனுபவித்து வருகின்றனர். ஆப்பிரிக்காவில் நம்முடைய மக்கள் படும் துயரத்தைச் சென்ற வருஷம் நானே என் கண்ணால் பார்த்தேன். நாம் அரசியல் அடிமைகளாக இருப்பதால்தான் இத்தகைய கஷ்டங்களெல்லாம் ஏற்படுகின்றனவென்பது உண்மையே. நாம் மட்டும் சுயேச்சையுடனிருந்திருந்தால் இந்த நிலைமையை ஒரு நாளைக்குக்கூடச் சகித்துக்கொண்டிருக்க மாட்டோம். பல வருஷங்களாகக் கடல் கடந்த இந்தியர்களின் உரிமைகளுக்காகப் போராடிய மகாத்மா காந்தி இந்தியா சுயேச்சை அடைந்தால்தான் வெளி நாடுகளிலுள்ள இந்தியர்களின் பிரச்னைக்கு நிவர்த்தி யேற்படுமென்ற முடிவுக்கு வந்ததன் அர்த்தத்தை நான் தென்னாப்பிரிக்காவுக்கு நேரே போனபிறகே உணரமுடிந்தது.

## பாதியாற்றில் படகை மாற்றுவதா?

ஆகவே நாம் எந்தப் பக்கம் திரும்பினாலும்சரி, கஷ்டங்களே நம்மை எதிர்த்து நிற்கின்றன. இச்சமயத்தில் நமக்கு வேண்டியது திடமான தேசாபிமானமும் அரசியல் அறிவுடைமையும், சரியான தலைவரின் வழிகாட்டுதலுந்தான்.

விசேஷ சந்தர்ப்பங்களுக்கிடையே இன்று நாம் இங்குக் கூடியிருக்கிறோம். இந்த வருஷத்தின் தலைவர் தேர்தல் தம்முடைய தோல்வியாகுமென மகாத்மாஜி அறிவித்திருக்கிறார். பிரிட்டிஷ் சர்க்காருக்கு ஆறுமாத அவகாசம் கொடுத்து, இறுதிக் கடிதம் விடுத்து, அவசியமாயின் அப்பால் நேரடியான போராட்டத்தில் இறங்குவதே புதிய வேலைத் திட்டமென்றும் கூறப்பட்டிருக்கிறது.

சமஷ்டியை எதிர்த்துப் போரிடுவதென்பதை எல்லோரும் ஒப்புக்கொண்டாகி விட்டது. ஆனால், போராட்டத்தை எப்பொழுது ஆரம்பிப்பது, எந்த வகையில் அதை ஆரம்பிப்பது என்பதுதான் இன்னும் முடிவாகவில்லை.

*இந்தப் போராட்டம் அஹிம்சாதர்மத்தை அடிப்படையாகக் கொண்டதாகவே இருக்குமென நான் நம்புகிறேன். மகாத்மா காந்திதான் அஹிம்சா தர்மத்தின் ஆச்சார்யர்; அஹிம்சாப் போராட்டத்தின் தத்துவத்தை நன்கறிந்தவர் அவரே.*

## போராட்டம் துவங்கிவிட்டது

*எனவே, அடுத்த போராட்டத்தை எப்பொழுது எவ்வாறு துவக்குவதென முடிவு செய்யும் பொறுப்பை நமது பழைய குருவிடம் விட்டுவிடவேண்டுமெனப் பலர் எண்ணுவது இயற்கையே. இப்போராட்டம் ஏற்கனவே துவங்கிவிட்டதென்றே சொல்லவேண்டும். சமஸ்தானங்களையும் பிரிட்டிஷ் இந்திய சமஸ்தானங்களையும் கொண்ட சமஷ்டி ஏற்படுத்தப்படவிருக்கிறது. அம்மாகாணங்களில் பெரும்பாலானவை இப்பொழுது காங்கிரஸின் ஆதிக்கத்திலிருந்து வருகின்றன. காங்கிரஸ் ஆதிக்கத்தைப் பாக்கியுள்ள மாகாணங்களுக்கும் நீடிக்கவேண்டுமென்பதுதான் அக்கிராசனரின் விருப்பமென நான் எண்ணுகிறேன்.*

*காந்திஜி சமஸ்தானங்களில் ஏற்கெனவே போராட்டத்தைத் துவக்கிவிட்டார். இதன் பலனாக ஒரு சமஸ்தானத்தின் அதிகாரிகள் சேத் ஜம்னலால் பஜாஜை நம்மிடையிருந்து பறித்துக்கொண்டு போய்விட்டனர். மகாத்மாஜி தக்க சமயத்தில் போராட்டத்தைப் புதிய துறையில் திருப்புவாரென்றும், அக்கிராசனர் இன்று வேண்டுவது,*

நாளை நிகழ்வது திண்ணமென்றும் நான் உறுதியாக நம்புகிறேன்.

## உற்சாகம் மட்டும் பிரயோசனப்படாது

உடனே போர் துவக்கவேண்டுமெனச் சொல்வோரின் உற்சாகத்தை நான் பாராட்டுகிறேன். ஆனால் அரசியலில் உற்சாகத்தால் மட்டும் வெற்றி ஏற்பட்டுவிடாது. தலைவரிடம் நம்பிக்கைகொண்டு கட்டுப்பாட்டுடன் நடக்கவேண்டியது அவசியம். சென்ற 20 வருஷகாலத்தில் காந்திஜியின் தலைமையில் தேசம் பெற்றுள்ள ஆற்றல், நமது அரசியல் சரித்திரத்தில் இணையற்றதாகும்.

வேகமாக முன்னேறிச் செல்லுமாறு அவர் பல முறை நமக்குத் தெரிவித்துள்ளார். அவசியமானபோது அவர் அந்த வேகத்தைக் குறைத்து வந்திருக்கிறார். சில சமயங்களில் போரை அடியோடு நிறுத்துமாறும் அவர் உத்தரவிட்டிருக்கிறார். அவருடைய தலைமையில் நாம் இதுவரை தடுமாறி விழுந்ததில்லை. இதுவரை நாம் சென்றுள்ள வழியினின்றும் இப்பொழுது ஏன் விலகவேண்டுமென்பது எனக்குத் தெரியவில்லை.

## வீரம் யுக்தம் இரண்டும் வாய்ந்தவர்

மகாகவி காளிதாஸன் தெரிவித்திருப்பது போல் வீரமற்ற ராஜதந்திரம் பயங்கொள்ளித்தனமும், ராஜதந்திரமற்ற வீரம் மிருகத்தனமும் ஆகும். காந்திஜி, வீரம், யுக்தம் இரண்டும் வாய்ந்தவரென நான் எண்ணுகிறேன். சமீபத்தில் பண்டித ஜவாஹர் ராஜ்கோட் ஜெய்ப்பூர் கிளர்ச்சி பற்றிப் பேசுகையில் காந்திஜியின் தொனி மிருதுவாக, ஆனால் இரும்புபோல் உறுதி வாய்ந்ததாக இருப்பதாகத் தெரிவித்தார்.

நமது சுதந்திரத்தின் விரோதிகள் புஷ்பத்துக்குள் இரும்பு மறைந்திருப்பதைக் காண்கிறார்கள். ஆனால், நாமே சில சமயங்களில் அந்தப் புஷ்பத்தைப் பலவீனத்தின் அறிகுறியென்று தவறாக எண்ணுகிறோம்.

இப்பொழுது இத்தேச நிலைமையும், சர்வதேச நிலைமையும் நெருக்கடியானவையா யிருக்கின்றன. இச்சமயத்தில் ஒரு சரியான முடிவுக்கு வருவதற்கான அறிவையும், ஆற்றலையும் திரிபுரத்தில் கூடியுள்ள அனைவருக்கும் வழங்குமாறு நான் ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்.

## ராஷ்டிரபதி தலைமையுரை

என்னை இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபையின் பிரதிநிதியாகத் தெரிந்தெடுத்தமைக்கு எனது மனப்பூர்வமான வந்தனத்தைத் தெரிவிக்கிறேன்; எனக்கு இத்தகைய மகத்தான வரவேற்பு அளித்தமைக்கும் மனமார்ந்த வந்தனம் செலுத்துகிறேன். எனது வேண்டுகோளுக்கு இணங்கி இங்கே வழக்கமாகச் செய்யப்படும் சில ஆடம்பரங்களை நீங்கள் கைவிட வேண்டியவர்களானீர்கள். ஆனால் அதனால் நீங்கள் சிறிதும் மனச்சோர்வு அடைந்துவிடவில்லை. அது பற்றி ஒருவரும் வருந்தமாட்டாரென்று கருதுகிறேன்.

நண்பர்களே! நான் மேலே தொடர்ந்து செல்வதன் முன்பு, ராஜகோட்டையில் மகாத்மா உண்ணாவிரதமிருந்து பெற்ற வெற்றியைப்பற்றி மகிழ்ச்சி யடைகிறேன்; நான் உங்களது உணர்ச்சியையே தெரிவிப்பதாக எண்ணுகிறேன். தேசம் முழுவதுமே கவலை தீர்ந்து மகிழ்ச்சி யடைந்திருக்கிறது.

நண்பர்களே! இந்த வருஷமானது அதிகப் பிரசித்தி வாய்ந்தது. ஏனென்று கேட்டால், தலைவர் தேர்தலானது எல்லா வருஷங்களையும் போல அமைதியாக நடைபெற

வில்லை. தேர்தலுக்குப் பிறகு கவலைக்கிடமான பல சம்பவங்கள் நிகழ்ந்தன. காரியக் கமிட்டியினர் பதினைவரில் பதின்மூன்று பேர் விலகினர். காரியக் கமிட்டியின் அங்கத்தவருள் ஒருவரான பண்டித ஜவாஹர்லால் நேரு சம்பிரதாயமாக விலகவில்லையாயினும் ஓர் அறிக்கை வெளியிட்டார். அந்த அறிக்கை அவர் காரியக் கமிட்டியினின்று விலகிவிட்டதாகவே எல்லாரையும் நம்பும்படி செய்தது. திரிபுரி காங்கிரஸ் கூடப்போகும் சமயத்திலே ராஜகோட் நெருக்கடியானது உண்ணுவிரதமிருக்குமாறு மகாத்மாவை வற்புறுத்தியது. காங்கிரஸ் தலைவர் திரிபுரிக்கு நோயுடன் வந்து சேர்ந்தார். ஆகவே தலைவர் பிரசங்கமானது முன்வருஷங்களைவிட இவ்வருஷத்திலே அளவில் சுருங்கியதாகிவிட்டது.

நண்பர்களே! இந்திய தேசிய காங்கிரஸின் விருந்தினராக எகிப்திய வாப்டு தூதுக்கோஷ்டியினர் வந்திருக்கின்றனர். அவர்களுக்கு நான் வரவேற்பளிக்கிறேன்; அதில் என்னுடன் நீங்களும் கலந்து கொள்வீர்களென்று நினைக்கிறேன்.

நமது அழைப்புக்கிணங்கி அவர்கள் வர நேர்ந்ததற்கு நான் அகமிக மகிழ்கிறேன். எகிப்தின் அரசியல் நிலையானது வாப்டுத் தலைவர் முஸ்தாபா நஹாஸ் பாஷாவை வர முடியாது செய்து விட்டமைக்கு நாம் வருந்துகிறோம். நமது நாட்டு மக்களின் சார்பில் அவர்களை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன்.

## பிரிட்டனுக்கு எச்சரிக்கை!

1938-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் நாம் ஹரிபுரத்தில் கூடினோம். அதன் பிறகு சர்வதேச நிலையில் பல சம்பவங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மேற்குநாட்டு வல்லரசுகளான பிரான்சும், பிரிட்டனும் நாஜி ஜெர்மனிக்குப் பணிந்து

கொடுத்த மூனிச் ஒப்பந்தமே அவற்றுள் முக்கியமானது. இதன் பலனாக ஐரோப்பாவில் பிரான்சு, வல்லரசென்ற செல்வாக்கிழந்தது. கிரமமில்லாமல் அந்தச் செல்வாக்கு ஜெர்மெனிக்குப் போய்ச் சேர்ந்தது. சமீபகாலத்தில் சிறிது சிறிதாக ஸ்பானிஷ் குடியரசு இரையானதால் பாஸிஸ்டு இதாலி, நாஜி ஜெர்மனி ஆகியவற்றிற்கு அதிக பலம் ஏற்பட்டது.

சோவியத் ருஷ்யாவைத் தாற்காலிகமாக ஐரோப்பிய அரசியலிலிருந்து விலக்கி விடவேண்டுமென்ற சதியாலோசனையுடன் வல்லரசுகளான பிரிட்டனும் பிரான்சும் இதாலி ஜெர்மனியுடன் கலந்துகொண்டன. ஆனால் இது எவ்வளவு காலம் இயலும்? ருஷ்யாவை அவமானப் படுத்துவதால் பிரிட்டனும் பிரான்ஸும் என்ன லாபம் பெற்றுவிட்டன?

## அரிய சந்தர்ப்பம்

நம்முடைய நாட்டு அரசியல் நிலையினைக் கவனிப்போம். எனது உடல் நிலை சரியின்மையின், சிலவற்றை மாத்திரம் குறிப்பிடுவதுடன் நிறுத்திக் கொள்கிறேன். சென்ற சில காலமாக எனக்கு என்ன தோன்றி வருகிறதென்பதை உங்களுக்கு விளக்கமாகத் தெளிவுபடுத்திச் சொல்லிவிடுகிறேன். நம்முடைய சுயராஜ்யக் கூச்சலைக் கிளப்பிப் பிரிட்டனுக்கு ஓர் எச்சரிக்கை மூலம் நமது தேசிய கோரிக்கையைத் தெரிவிக்கவேண்டிய காலம் வந்துவிட்டதென்று நான் நினைக்கிறேன்.

பொறுமையுடன் காத்திருந்து சமஷ்டி நம்மீது சுமத்தப்படட்டும் என்று எதிர்பார்க்கும் காலம் அப்பொழுதே போய்விட்டது. சமஷ்டி எப்பொழுது வரப் போகிறது என்பது நம்முன் நிற்கும் விஷயமல்ல. ஐரோப்பாவிலே

அமைதி நிலவும்வரை சில காலத்துக்கு சமஷ்டியை அமுலுக்குக் கொண்டுவராமல் பிரிட்டன் ஒத்திப்போட்டால் என்ன செய்வது என்பதே நம்முன் நிற்கும் கேள்வி. ஐரோப்பாவிலே நிரந்தரமாக அமைதி ஏற்பட்டு விடுமாயின் பிரிட்டனின் சாம்ராஜ்யக்கொள்கை மிகக் கடுமையானதா யிருக்கும். பாலஸ்தீன யூதர் அராபியர் விஷயத்தில் சிறிது சமாதானம் செய்ய அது முற்படுதற்குக் காரணம் என்ன? சர்வதேச அரசியலில் பிரிட்டனுக்குள்ள பலவீனமே. ஆகவே நாம் நமது தேசியக் கோரிக்கையைப் பிரிட்டனுக்கு எச்சரிகை மூலம் தெரிவித்தல் வேண்டும். பிரிட்டனின் பதிலுக்கு ஒரு கால வரையறை கொடுக்கவேண்டும். பதில் வராவிடினும் - திருப்திகரமான பதில் கிட்டாவிடினும் - நமது லக்ஷியத்தை அடைய நாம் நம்மிடமுள்ள ஆயுதத்தை எடுக்கவேண்டுவதே.

நம்மிடமுள்ள ஆயுதம் எது? சத்தியாக்கிரகம் - இந்தியாவெங்கும் பெருத்ததொரு சத்தியாக்கிரகப் போராட்டத்தைத் தற்போதைய நிலையில் பிரிட்டன் ஏற்படுத்திக் கொள்ள விரும்பவில்லை. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை அடியோடே துவம்சம் செய்யும் காலம் இன்னும் வரவில்லை யென்று நினைக்கும் தயக்க வாதிகளும் காங்கிரஸிலிருப்பது எனக்கு மிகுந்த வருத்தத்தினை யுண்டுபண்ணுகிறது. இருக்கிற நிலையை உணர்ந்து பார்த்தால் அந்த மாதிரியான தயக்க வாதத்துக்கு இடமேயில்லையென்று எனக்குத் தோன்றுகிறது. எட்டு மாகாணங்களில் காங்கிரஸ் ஆட்சியேற்பட்டபடியால் நமது ஸ்தாபனத்தின் கௌரவமும் பெருமையும் அதிகரித்து விட்டன. பிரிட்டிஷ் இந்தியாவிலும், சமஸ்தானங்களிலும் மகத்தான விழிப்புணர்ச்சி ஏற்பட்டுளது. சர்வதேச நிலை நமக்குச் சாதகமாயிருக்கும்பொழுது நம் தேசிய கோரிக்கையை நிறைவேற்றிக் கொள்வதற்கு

இவற்றைவிட வேறு என்ன அனுகூலங்கள் நமக்கு வேண்டும்?

## தயக்கம் வேண்டாம்

நான் நிலைமையை ஆராய்ந்து அதன்படி நடப்பவன். தற்கால நிலைமையானது நமக்கு மிக்க சாதகமளிப்பதா யிருக்கின்றது. ஆகவே தயக்கம் வேண்டாம். மனோதிடமும் உறுதியும் தேவை. நமது வேற்றுமைகளையும் அற்பச் சண்டைகளையும் போக்கிப் பலத்தையெல்லாம் திரட்டிக் கொண்டு போராட்டத்திலே இறங்கிப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்ப்போமாக; எதிர்ப்பை உரப்படுத்துவோமாக.

இந்தச் சாதகமான நிலையை உபயோகித்துக்கொள்ளும் அரசியல் அறிவுடையவராக நாமிருக்கிறோமா? அல்லது ஒரு தேசிய வாழ்வில் கிடைப்பதற்கரிய இந்தச் சந்தர்ப்பத்தையும் இழந்துவிடுவோமா?

இந்தியாவிலும் சமஸ்தானங்களிலும் ஏற்பட்டுள்ள விழிப்புணர்ச்சி பற்றி நான் முன்னமேயே கூறினேன். ஹரிபுரக் காங்கிரஸ் தீர்மானத்தின்படி சமஸ்தான விஷயமாக நாம் கொண்டுள்ள அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ள நான் கருதுகிறேன். காங்கிரஸ் பெயரால் சமஸ்தானங்களில் சிற்சில செயல்கள் நடைபெறுவது அத்தீர்மானத்தின் மூலம் தடுக்கப்பட்டது. அத்தீர்மானத்தின்படி சட்ட சபை வேலையோ, சத்தியாக்கிரகமோ சமஸ்தானங்களிலே காங்கிரஸ் பெயரால் நடத்தப்படல் கூடாது. ஆனால் ஹரிபுரத்திற்குப் பிறகு பல சம்பவங்கள் நிகழ்ந்துவிட்டன. பல சமஸ்தானங்களிலே சமஸ்தான மன்னர்களுடன் மந்திரி அரசாங்கத்தின் அதிகாரம் தலைநீட்டுதல் காண்கிறோம்.

இந்தியாவில் காங்கிரஸ்காரராகிய நாம் சமஸ்தான மக்களுடன் ஒருங்கு சேரவேண்டாமா ?

இன்றையதினம் நமது கடமை என்ன என்பதுபற்றி என் மனத்தில் ஐயமறத் தெளிந்துவிட்டேன். ஹரிபுரத் தீர்மானத்தை மாற்றிச் சமஸ்தானப் போராட்டத்தைக் காரியக்கமிட்டி பெருந் திட்டம் போட்டு விரிவாக நடத்தல் வேண்டும். இதுவரை ஆங்காங்கே சிறு சிறு போராட்டங்களாக நிகழ்ந்தன. நிரந்தரமான திட்டமிட்டு அவற்றை நடாத்தல் வேண்டும். காரியக்கமிட்டி இப்பொறுப்பை ஏற்கும் காலம் வந்துவிட்டது. வேண்டுமானுல் அதற்கு ஓர் உப கமிட்டியும் நியமித்துக்கொள்ளலாம். அகில இந்திய சமஸ்தானப் பிரஜைகள் சங்கம், மகாத்மா காந்தி ஆகியோரின் ஒத்துழைப்பையும் நாம் பெறல் வேண்டும்.

## ஒன்றுபடுக !

நமது சுயராஜ்ய முன்னேற்றம் பற்றி முன்னமே சொன்னேன். அதற்குப் போதிய ஆயத்தம் தேவை. நமது ஸ்தாபனத்துள்ளே அதிகார மோகத்தால் ஊழல் மலிந்துவிட்டது. அதை ஒழித்தல் வேண்டும். நாட்டிலிருக்கின்ற தொழிலாளர் கிருஷிகர் ஸ்தாபனங்களான ஏகாதிபத்திய எதிர்ப்புச் சக்திகளுடன் நாம் ஒன்றுபட்டு அதிகமாக நெருங்கிய தொடர்பு கொள்ளல்வேண்டும். ஏகாதிபத்திய எதிர்ப்புச் சக்திகளையெல்லாம் ஒன்று கூட்டி ஏகாதிபத்தியத்தைப் புதைக்கவேண்டும்.

நண்பர்களே ! காங்கிரஸினுள்ளே இன்றைத் தினம் புகை சூழ்ந்து இருள் மண்டியிருக்கிறது. நமது நண்பர்களிற் பலர் வெறுப்புற்றவராகக் காணப்படுகிறுர் ; மனச்சோர்வடைந்து உணர்ச்சியற்றவராகக் காணப்படுகிறுர். ஆனுல் நான் சலியாத திடமனமுடையவன் ; உறுதியாய்

நிற்பவன். இன்றைய தினம் நீங்கள் பார்க்கும் இந்த மேக மானது விரைவில் நீங்கக் கூடியது. எனது நாட்டு மக்களின் தேசபக்தியிலே எனக்கு நம்பிக்கையிருக்கிறது. சீக்கிரத்திலே தற்போதைய கஷ்டங்கள் நீங்கி நமக்குள்ளே ஒற்றுமை ஏற்படுமென்று நிச்சயமாக நம்புகிறேன்.

1923-ஆம் வருஷம் கயா காங்கிரஸில் இந்த மாதிரியான நிலைமை யொன்று ஏற்பட்டது. அதன் பிறகு தேசபந்து தாஸும், பண்டித மோதிலால் நேருவும் சுயராஜ்யக் கக்ஷியை ஸ்தாபித்தனர். என் குரு, மோதிலால் ஆகியோரின் ஆன்மசக்தி நமக்கு உணர்ச்சி யூட்டுமாக. நம்மிடை யிருக்கும் மகாத்மா காந்தி நமக்கு உதவிபுரிந்து நம்மை நடத்திச் செல்வாராக; தற்போதைய கஷ்டத்திலிருந்து காங்கிரஸைக் காப்பாற்றுவாராக. இதுவே எனது பிரார்த்தனை.

## வாப்டு கட்சியினருக்கு வரவேற்பு

எகிப்திலிருந்து இந்திய தேசிய காங்கிரஸ் வைபவத்துக்கு வந்த வாப்டுக் கட்சியின் தூது கோஷ்டியினருக்குத் தேசத்தின் சார்பில் வரவேற்பளிக்கப் பட்டது. பண்டித ஜவாஹர்லால் நேரு பின்வருமாறு வரவேற்புக் கூறினார்:—

"எகிப்திய தூது கோஷ்டியினர் நீண்ட நாட்களுக்கு முன்பே அளித்திருந்த வாக்குறுதியினை நிறைவேற்றினர். இந்திய மக்களுக்கு நம்பிக்கை அளிக்கக்கூடிய செய்தி யொன்றை அவர்கள் கொண்டுவந்திருக்கிறார்கள். அதே மாதிரியான செய்தியொன்றை இதே தூது கோஷ்டியினர் மூலம் நாமும் எகிப்துக்கு அனுப்புவோம். எகிப்தியப் போராட்டம் நமது போராட்டத்தின் ஒரு பகுதியே. நம்மைப்போலவே அவர்களும் நம் விரோதியான பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடுகிறார்கள். இந்தியாவின் நிலைமை வேறாயினும் நம்மிருவரின் அனுபவத்தாலும்

நமக்கு நன்மை விளையும். ஆகவே, அவர்களைச் சந்திப்பதில் நமக்கு மிகுந்த ஆனந்தம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் அவர்களது மகத்தான தலைவரான நஹாஸ் பாஷா வர முடியாமைக்கு நாம் மிக வருந்துகிறோம். நான் எகிப்திலிருந்தபொழுது அவர் இந்தியாவைப் பார்க்க மிகுந்த ஆவல் கொண்டிருப்பதாகத் தெரிவித்தார். அவருக்குச் சமயம் வாய்க்கும்பொழுது இந்தியாவுக்கு விஜயம் செய்வாரென்று நான் கருதுகிறேன்.''

## எகிப்தியர் பதில்

இந்திய தேசத்தின் சார்பாக அளிக்கப்பட்ட வரவேற்பிற்கு எகிப்திய தூதுக் கோஷ்டித் தலைவரான மகாத் பே பின்வருமாறு விடை கூறினார் :

"காங்கிரஸ் வைபவத்துக்கு வருமாறு எங்களுக்கு அழைப்பு விடுத்தமைக்கும், எங்களுக்கு மகத்தான வரவேற்பு அளித்தமைக்கும் மிக்க வந்தனம் பாராட்டி எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்தக் காங்கிரஸ் வைபவத்துக்கு விஜயம் செய்யவேண்டுமென்று எங்கள் தலைவரான நஹாஸ் பாஷா அடக்கமுடியாத ஆவலுடனிருந்தார். ஆனால் முக்கியமான அரசியல் நெருக்கடி சிலவற்றால் அவர் வர இயலாது போயிற்று. இந்திய மக்களாகிய உங்களுக்கு எகிப்திய மக்களின் ஆசிச் செய்தியை அவர்கள் சார்பில் கொண்டுவந்திருக்கிறோம்; இந்த மகத்தான புனித நாட்டுக்குச் சீரும் சிறப்பும், பேரும் புகழும் ஓங்குதல் வேண்டுமென விரும்புகிறோம்; சகோதர நேயத்துடனும் அன்பு ஆதரவுடனும் உங்களுக்கு வாழ்த்துக் கூறுகிறோம்.

"உங்கள் அழைப்புக் கிணங்கி நாங்கள் இங்கே விஜயம் செய்துள்ளோம். நம்மிருவர் நாடுகளுக்கும் உள்ள பொதுவான ஒற்றுமைப் பாட்டையும் நம்மிரு நாடுகளையும் ஒன்று

படுத்தும் அம்சங்களையும் எண்ணி எண்ணி நாங்கள் இறுமாந்து கொண்டிருக்கிறோம்.

"மதங்களும், தத்துவங்களும், வேதாந்தங்களும் கீழ் நாட்டிலிருந்து தோன்றியன அல்லவா? ஒத்துழைப்பு, அமைதி ஆகியவற்றைப் போதிக்கும் மதங்கள் கீழ்நாட்டில் தானே தோன்றின? உன்னத வாழ்வு, உயரிய நோக்கம், மனித சமூகத்தின் நலன் ஆகியனபற்றிப் போதிக்கும் மதங்கள் எல்லாம் தோன்றியது கீழ் நாட்டிலல்லவா?

"ஆகவே நம்மிரு நாட்டவரின் உணர்ச்சிகளும் பிறவும் ஒன்றாயிருப்பதில் ஆச்சரியமென்ன இருக்கிறது?

"1918-ஆம் வருஷத்திலே எகிப்தில் ஜக்லூல் பாஷா ஏகாதிபத்தியத்தை உலுக்கினார். அதே காலத்தில்தான் தீர்க்கதரிசியாகிய மகாத்மா இந்தியாவில் ஏகாதிபத்திய விலங்கினை முறிக்க ஆரம்பித்தார்.

"ஜக்லூல் பாஷா போர் முனையில் பட்டார்; அவர் வயதானவர்; நோயாளி; ஆயினும் வீரதீர பராக்கிரம மிக்க தளகர்த்தர். எங்களது தற்போதைய தலைவரான நஹாஸ் பாஷா தூக்கிய கொடியை முன்னே எடுத்துச் சென்றார். சிறைக்கும், தூக்கு மேடைக்கும் அவர் அஞ்சவில்லை. முடிவில் அவர் தமது லக்ஷியத்தை அடைந்தார். தீர்க்கதரிசியாகிய அவருடைய கொள்கையால் எகிப்துக்கு வெற்றி மேல் வெற்றியுண்டாயிற்று. அதன் பயனாக 1936-ஆம் வருஷத்திய சுதந்திர உடன்படிக்கையும் 1938-ஆம் வருஷத்திய மாண்ட்ரீல் ஒப்பந்தமும் ஏற்பட்டன.

## ஒற்றுமை

"எகிப்தின் வெற்றிக்குக் காரணம் அதன் ஒற்றுமையே. சுதந்திரப் போர் வீரர்கள் ஒற்றுமையின்றி யிருந்தால் ஒன்றுமாகாது. எங்களுள் முஸ்லிம்களுண்டு; கிறிஸ்தவர்க

ளூர் ; ஆனால் ஐக்லுல் பாஷா எங்களை ஒன்றுபடுத்தி எகிப்திய சமுதாயமாக்கினர். எங்கள் ஒற்றுமையும் சிறந்த தலைமையுமே எங்களுக்கு விடுதலை யின்பம் அளித்தன.

"எங்களது வருகையால் எகிப்திய இந்திய சம்பந்தத்திலே ஒரு புதுயுகம் பூக்குமென்று நம்புகிறோம். மகாத்மா காந்தி எங்களுக்களித்த வரவேற்புத் தந்தியில் கூறியுள்ளபடி இந்தியாவுக்கும் எகிப்துக்கும் இணை பிரியாத பந்தமுண்டு பண்ணுமாக. வரும் ஏப்ரலில் வாப்டு காங்கிரஸ் எகிப்திலே கூடப் போகிறது. அதற்கு உங்களை அழைக்கிறோம் ; எகிப்திய மக்களுக்கும், எங்கள் தலைவர் நஹாஸ் பாஷாவுக்கும் உங்கள் தூதுக் கோஷ்டியை வரவேற்பதைவிட வேறு ஆனந்தமில்லை. இதனாலே நம்மிடையே பந்தம் அதிகமாகும்.

"பற்பல மதங்களைச் சார்ந்தவரும் பற்பல விதத்தினருமான கோடிக் கணக்கான மக்களாகிய நீங்கள் இந்திய நாட்டின் விடுதலைக்காக ஒன்றுபட்டு இங்கே அபரிமிதமாகக் கூடியிருப்பது கண்டு நாங்கள் மட்டற்ற மகிழ்ச்சி கொள்கிறோம். எகிப்திலே அராபியரும் கிறிஸ்தவரும் ஒன்றுபட்டு ஏகாதிபத்தியத்துடன் போராடியதுபோல நீங்களும் ஒன்றுபட்டு விடுதலைக்காகப் போராடுவீர்களாக."

## பிரதம மந்திரியின் பேச்சு

காங்கிரஸ் பொருட் காட்சிப் பந்தலில் பிரதம மந்திரி ராஜாஜி பின்வருமாறு பேசினர் :—

மகாத்மா காந்தி சிறிதளவுதான் தம்மால் செய்யமுடியுமென்று கூறி நிரம்பச் செய்து காட்டுகிறார். அவரை நம்புங்கள். அவர் உங்களைப் பத்திரமாகக் காத்துச்செல்வார். தற்பொழுது இந்த ஆற்றிலே இரண்டு படகுகள் மிதக்கின்றன. ஒன்று பழையது ; மிகப் பெரியது ; மகாத்மா

காந்தியால் செலுத்தப்படுவது. புதிய படகுடன் ஒருவர் வந்திருக்கிறார்; அந்தப் படகு கண்ணைக் கவரக்கூடியதாய் மிக அழகாயிருக்கிறது. அவர் அந்தப் படகில் ஏறிக் கொள்ளுமாறு சொல்கிறார்.

மகாத்மா காந்தி அனுபவம் வாய்ந்த படகோட்டி. அவர் உங்களைப் பத்திரமாய் ஆற்றின் அக்கரை கொண்டு சேர்ப்பார். புதிய படகு இருக்கிறதே! அது ஓட்டைப் படகு என்பது எனக்குத் தெரியும். அந்த ஓட்டைப் படகிலே நீங்கள் ஏறிக் கொண்டீர்களானால் எல்லோரும் முழுகிப் போவீர்கள். நர்மதா நதி மிகவும் ஆழமானது; மிக மிக ஆழமானது.

புதிய படகோட்டி என்ன சொல்கிறார்? நீங்கள் என்னுடைய படகிலே ஏறிக்கொள்ள முடியாதென்றால் உங்கள் படகுடன் என் படகினைக் கட்டிவிடுங்கள் என்கிறார். இதுவும் முடியாத காரியம். ஏனென்று கேட்டால் நல்ல படகுடன் ஓட்டைப் படகினைத் தொடுத்தல் இயலாது. அவ்விதம் செய்து ஆற்றிலே முழுகிப் போகும் ஆபத்துக்கு ஆளாக முடியாது. நமக்கு ஒரே ஒரு தலைவரே உண்டு. அவரே மகாத்மா காந்தி. அவர் சொற்படி கேட்டு அவர் பக்கம் நாம் நிற்றல் வேண்டும். அவரே பாதுகாப்பான மனிதர். அவருடைய படகில்தான் நாம் ஏறவேண்டும். அவர் அனுபவம் வாய்ந்தவர். எங்களுக்குத் தெரிந்து இந்த 35 வருஷங்களாக நாங்கள் அவரைச் சோதித்துத் திருப்தியடைந்துவிட்டோம்.

வெறும் வாய்க் கூச்சலில் மயங்கி ஓட்டைப் படகில் ஏறிவிடாதீர்கள் என்று உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். புதிய படகிலே சிறிதுநேரம் ஏறியிருந்துவிட்டுப் பழைய படகுக்கு வந்துவிடலாமென்று எண்ணாதீர்கள். புதிய படகு ஓட்டையானதனாலே மறுபடியும் பழைய படகில் ஏறும்வரை நீங்கள் பிழைத்திருக்க மாட்டீர்கள்.

## வயிற்றெரிச்சல் வர்தம்

### தலைவர்கள் பேச்சு

இந்த வருஷத்திய காங்கிரஸில் மிகவும் சுவையான சமாசாரம் என்னவென்று கேட்டால் பண்டித கோவிந்த வல்லப பந்த் கொண்டுவந்த ஒரு தீர்மானத்தின்மீது நடை பெற்ற விவாதமே யாகும். அத்தீர்மானம் வருமாறு:—

"சென்ற இருபது வருஷமாக மகாத்மா காந்தியின் துணையால் கோலப்பட்ட திட்டத்தை அடிப்படையாகக் கொண்டுள்ள கொள்கைகளிலே திடமான உறுதி கொண் டிருப்பதாக இக்கூட்டம் தெரிவிக்கிறது; இந்தக் கொள்கை யில் எத்தகைய முறிவும் ஏற்படல் கூடாதென்று உறுதி யிட்டுக் கூறுகிறது. எதிர்காலத்தில் இக்கொள்கைகளே காங்கிரஸில் தொடர்ந்து கடைப்பிடிக்கப்படல் வேண்டு மென்று விரும்புகிறது.

"சென்ற வருஷத்திய காங்கிரஸ் காரியக் கமிட்டியின் செயல்களில் நம்பிக்கை யிருப்பதாகத் தெரிவிக்கிறது; அதன் அங்கத்தவர் எவர்மீதும் ஏதாவது கதை கட்டி விடப்படுவது கண்டு வருந்துகிறது.

"வரப்போகும் வருஷத்திலே நெருக்கடியான நிலை ஏற்படல் கூடுமாதலாலும், அம்மாதிரியான நெருக்கடி காலங்களிலே நாட்டையும் காங்கிரஸையும் வெற்றியடையச் செய்யக்கூடியவர் மகாத்மா காந்தி ஒருவரே யாதலாலும் காங்கிரஸ் நிர்வாக சபையானது மகாத்மா காந்தியின் பூரண நம்பிக்கையையும் பெற்றதா யிருத்தல் வேண்டுமென்று விரும்புகிறது; வரப்போகும் வருஷத்திய காரியக் கமிட் டியை மகாத்மா காந்தியின் இஷ்டத்தினை ஒட்டி நியமித்துக் கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறது."

இந்தத் தீர்மானத்தின்மீதுதான் மிகவும் தீவிரமான விவாதம் நடைபெற்றது.

தீர்மானத்தைக் கொண்டுவந்த பண்டித பந்த் மிகவும் உருக்கமாகப் பேசினார். அவர் குறிப்பிட்டது வருமாறு:—

நம்முடைய தேசம் சென்ற இருபது வருஷங்களாக ஒரு குறிப்பிட்ட திட்டத்தைக் கடைப்பிடித்து நடந்து வருகிறது. அத்திட்டம் மகாத்மா காந்தியால் வகுக்கப்பட்டது. நம்முன் தற்பொழுது அதைத் தவிர வேறு உருப்படியான திட்டம் ஒன்றுமில்லை. அத்திட்டத்தின் பலா பலன்களை நாம் நேரிலே கண்ணால் கண்டிருக்கிறோம். அந்த நேர்பாதையை விடுத்து நாம் அந்தகாரத்தில் நுழைவது முட்டாள்தனமாகும். சென்ற இருபது வருஷங்களாக நாட்டிற்கு உழைத்த நம்பிக்கைக்குரிய தலைவர்களின் ஒத்துழைப்பையும், மகாத்மாவின் ஆதரவினையும் பெற முடியாவிட்டால் அப்புறம் காங்கிரஸுக்கு என்ன கௌரவம் இருக்கிறது? நம்மிடத்திலே பக்க பலமில்லாவிட்டால் உங்களையும் என்னையும் லக்ஷியம் செய்து செவி சாய்த்துக் கேட்பவர் யார்? ஒருவரும் இல்லை. இன்று நான் கொண்டுவந்துள்ள இத்தீர்மானம் மிக மிக முக்கியமானது. ஏனெனின், வரப்போகும் ஆண்டிலே காங்கிரஸின் கொள்கையும் திட்டமும் இந்தத் தீர்மானத்தை ஒட்டியே அமையும். சச்சரவு எதனையும் நான் கிளப்ப விரும்பவில்லை.........

....பாபு ராஜேந்திரப் பிரசாத், மௌலானா அபுல்கலாம் அசாது போன்ற கிழத் தலைவர்களின் ஸேவையை நாம் இழந்துவிடுவதா? பண்டித ஜவாஹர்லால் நேருவைப் பற்றிய விஷயமென்ன? மகாத்மா காந்திக்குப் பிறகு, தேசத்தின் வழிகாட்டியாக இலங்கக் கூடியவர் அவர் ஒருவரே யென்று நாடு எதிர்நோக்கி நிற்கிறது. இந்த அனுபவ் சாலிகளின் ஸேவையை நாம் இழப்பது அறிவுடைமையாகுமா? அம்மாதிரியான தவறு செய்வோமானால் அது

காரியக் கமிட்டியின் கௌரவத்தை அதல பாதாளத்தில் அழுத்திவிடும். சுதந்திரப் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தி வெற்றி பெறவே நாம் விரும்புகிறோம். இந்தக் கிழத் தலைவர்களின்மீதே தேசம் தன் முழு நம்பிக்கையை யும் வைத்திருக்கிறது. இளைஞர்கள் தீவிர மிக்கவர்களா யிருக்கலாம். பெரியாரின் நம்பிக்கையைப் பிடித்துக் கொள்வதில்தான் நமது பலமிருக்கிறதென்பதை அவர்கள் உணர்தல் வேண்டும். அவர்களது ஆதரவின்றி முழுப் பொறுப்பினையும் ஏற்று வகிக்கச் சுபாஷ் போஸால் முடியு மென்று நீங்கள் நினைக்கிறீர்களா? இங்கே படுக்கையில் படுத்துக்கொண்டு அவர் அலுவல்களைக் கண்காணிப்பது கண்டு என் உள்ளம் துடிக்கிறது. அவர் ஏதனால் அப்படிச் செய்கிறார்? தேசத்தின்மீது கொண்ட அடங்காத ஆவலி னால் - மங்காத பொறுப்புணர்ச்சியினால் - அதுபற்றி அவ ரைப் போற்றுதல் வேண்டும். பழைய கூட்டாளிகளும் அனுபவசாலிகளுமான கிழத்தலைவர்களின் ஒத்துழைப்பின் மூலம் அவர் நம்மை நமது லக்ஷியத்தை அடைவதில் வெற்றிபெறச் செய்வாரென்று எதிர்பார்க்கிறோம்.

சுபாஷ் சந்திரபோஸ் தம் சகாக்கள்மீது வீண்பழி சுமத்தினாரென்கிற வீண் வாதத்தை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். நாட்டிலே பொதுவாக எத்தகைய அபிப்பிராய மிருக்கிற தென்பதையே குறிப்பிட்டதாக அவர் தமது அறிக்கையில் விளக்கியிருக்கிறார். காங்கிரஸ் கொள்கைக்கு விரோதமாக அவருடைய கூட்டாளிகள் ஏதும் செய்வதாக அவர் ஒருபோதும் கருதவில்லை.

மகாத்மா காந்திமீது நமக்குள்ள நம்பிக்கையானது ஓர் அணுவளவும் குன்றவில்லை யென்பதை நாம் உலகுக்குக் காட்டுதல் வேண்டும். அவரது ஆதரவின்றி நாம் அபிவிருத்தியடைய முடியாது. நான் சொல்வதை நம்புங்கள்.

காங்கிரஸுக்கு அவருடைய ஆதரவு இன்றேல் உங்கள் மீதும் என்மீதும் தேசத்திற்கு நம்பிக்கை இராது.

இத்தீர்மானத்துக்குப் பல திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. தோழர் எம். என். ராய் கொண்டுவந்த திருத்தம் ஒன்று. ராய் குறிப்பிட்டது வருமாறு :—

காங்கிரஸ் கொள்கையிலே எவ்வித மாறுதலும் இல்லை யென்று தலைவர் தேர்தலுக்குப்பின் பல அறிக்கைகள் வெளியிடப்பட்டன. அப்படியிருந்தும் கொள்கை மாற்றமென்று கூச்சல் போடுவது ஏன் என்பது எனக்கு விளங்கவில்லை. சுபாஷைத் தேர்ந்தெடுத்ததில் தவறு ஏதும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இரு கட்சியினரும் தேர்தல் காலத்திலே தங்கள் தங்கள் கட்சியைக் கூறினர். பிரதிநிதிகள் தங்கள் இஷ்டப்படியே போஸைத் தெரிந்தெடுத்தார்கள். இது ஜனநாயக ஸ்தாபனத்தில் மிகவும் சர்வ சாதாரணமானதுதானே? பயப்படுவதற்கோ, நடுங்குவதற்கோ ஒன்றும் நடந்துவிடவில்லையே! இவ்வளவு நடுக்கமும் கூச்சலும் ஏன்? போஸின்மீதும் அவரைத் தெரிந்தெடுத்த பிரதிநிதிகள்மீதும் நம்பிக்கை இல்லையென்று இத்தீர்மானம் தெரிவிப்பதாகும். "சுபாஷைத் தெரிந்தெடுப்பது தேசத்துக்குத் தீமையே" என்று காரியக் கமிட்டியினர் அறிக்கை வெளியிட்டனரே! போஸின் வெற்றி தமக்குத் தோல்வி யென்று மகாத்மா கொள்வானேன்?

நரிமன் தமது திருத்தத்தைக் கொண்டுவந்து பின் வருமாறு பேசினார் :—

இந்தத் தீர்மானம் ராஷ்டிரபதியை வெறும் பொம்மையாக்கி விடுகிறது. காங்கிரஸிலே நாலணா அங்கத்தினராகக் கூட இல்லாத ஒருவரிடமிருந்து உத்தரவு பெற்றுக்கொள்ளச் சொல்கிறது. காங்கிரஸ் மகாத்மா காந்தியை விடப் பெரியது. முதன் முதலாக இவ்வருஷமே காங்கிரஸ் தலைவர்

ஜனநாயக முறைப்படி தெரிந்தெடுக்கப் பட்டிருக்கிறார். நாட்டு மக்கள் தம்மீது வைத்துள்ள நம்பிக்கைக்கு உரியவ ரென்று தெரிவித்துக்கொள்ள அவருக்குச் சந்தர்ப்பமளித் தல் வேண்டும்.

சர்தார் சார்தூல் சிங் தாம் கொண்டுவந்த திருத்தத் தின்மீது பேசியது வருமாறு :—

காங்கிரஸ் காரியக் கமிட்டிமீதும் மகாத்மாமீதும் நம் பிக்கைத் தீர்மானம் நிறைவேற்றலாம். ஆனால் நாங்கள் தெரிந்தெடுத்த ஒருவர்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்ற நாங்கள் தயாராயில்லை. சர்தார் வல்லபாய் ஆகியோரைவிடச் சிறந்த மனிதர் போஸுக்குக் கிடைப்பது அரிதே. ஆயினும் இந்தத் தலைவர்களின் நடத்தையினை நான் ஏற்க முடியாது. மகாத்மா காந்தியின் பெயரால் இவர்கள் தங்கள் இஷ்டப்படி காரியங்களை நடத்துகிறார்கள்.

திரு. சத்தியமூர்த்தி பேசியது வருமாறு :—

பிரதிநிதிகளே! நான் உங்களைக் கேட்கிறேன்; உங் கள் மனத்திலே கையை வைத்துச் சொல்லுங்கள்! இந்த அபாண்டமான பழி சொல்லப்பட்டதுபற்றி நீங்கள் வருந்தவில்லையா? நானாக இருந்தால் இதற்கு மன்னிப்புக் கேட்டே யாகவேண்டுமென்று கூறியிருப்பேன். இந்தத் தீர்மானம் தலைவர்மீது நம்பிக்கையில்லையென்று சொல்வ தாகுமென்று ராய் தெரிவித்தார். இத்தீர்மானம் பெரும் பாலாராலேயே நிறைவேற்றப்படும். பெரும்பாலார் தாம் போஸை முன்பு தெரிந்தெடுத்தனர். தற்பொழுது இந்தத் தீர்மானத்தையும் நிறைவேற்றுகின்றனர். ஒரு சமயம் செய்ததையும், சொன்னதையும் பெரும்பாலார் மாற்றிக் கொள்ளல்கூடாது என்று யார் சொல்லுவார்?

தத் மஜும்தார் பின்வருமாறு கூறினார் :—

இந்தத் தீர்மானம் சதி எண்ணத்துடன் கொண்டு வரப்பட்டது. இந்த அநாவசிய விவாதத்தில் அருமையான காலம் வீணாகக் கழிக்கப்படுகிறது. ஜனநாயக முடிவை இது மாற்றுவதா யிருக்கிறது. இது ஜன நாயகத்தையே எதிர்த்துக் கலகம் செய்வதாகும். ஜனநாயகம் விரும்புவோர் எல்லாரும் இதை [illegible]ர்த்தே யாதல்வேண்டும். நம்முடைய பெரிய தலைவர்கள் ஒன்றுகூடிப் பெரிய பெரிய விஷயங்களை யெல்லாம் விட்டு மறந்து அற்ப விஷயங்களில் வீண்விவாதம் புரிகிறார்கள். மகாத்மாவின் பெயரின்கீழ் இந்தத் தீர்மானத்தின் அந்தரங்க எண்ணம் மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது. இது சத்தியத்துக்கும் அஹிம்ஸைக்கும் முற்றும் முரணானது. இந்தத் தீர்மானத்தின் விஷக் கொடுக்கு வாலில் இருக்கிறது. தலைவரின் காலையும் கையையும் கட்டிப்போடக் கொண்டுவரப்பட்ட தீர்மானம் இது.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் பேசியது வருமாறு :—

நாம் ஒவ்வொருவரும் தவறு செய்வது சகஜமே. ஆனால் அதைத் திருத்திக்கொள்ளல் கூடும்.

காங்கிரஸ் சமஷ்டியை எதிர்த்தபோதிலும் முக்கியமான தலைவர் சிலர், நிபந்தனையுடன் சமஷ்டியை ஏற்கலாமென்று கூறுகின்றனரென்றும், சமஷ்டி மந்திரி ஜாப்தா தயாராகி விட்டதென்றும் ராஷ்டிரபதி கூறினார். அது நேரடியாகவோ மறைமுகமாகவோ, காரியக் கமிட்டியைத் தாக்குகிறது. இத்தகைய அறிக்கைக்குப் பிறகு ஏதாவது செய்தே யாக வேண்டும். சந்தேகத்துக்கிடமான காரியக் கமிட்டியினர் பதவியை வேறு யாரேனும் ஏற்றல்வேண்டும். ஏனெனில் மன்னர் மனைவி பதிவிரதைதானா என்ற சந்தேகம் ஏற்படக் கூடிய நிலையில் இருத்தலாகாது.

அன்னபூர்ணையா பேசியது வருமாறு :—

சர்தார் படேல் காந்தீயத்தில் ஊறியவர். அவர் சுபாஷினைத் தெரிந்தெடுப்பது நாட்டுக்குத் தீமையென்று கூறிய வார்த்தைகளை வாபீஸ் பெறுவாரென்று நினைத்தேன். புலாபாயும், சத்தியமூர்த்தியும் சமஷ்டி ஏற்புப் பற்றிப் பேசி வந்தனர். காரியக் கமிட்டியினர் இது விஷயத்தில் மௌனம் சாதித்திருந்தனர். ஆகவே அவர்களை அறை கூவவேண்டிய பொறுப்புத் தலைவரது. காந்திமீது நம்பிக்கை என்ற விஷயம் இங்கே எழ இடமேயில்லை.

பண்டித பந்த் திருப்பிக் கூறுகையில் தலைவர்மீது நம்பிக்கையில்லை என்பதைத் தெரிவிப்பதாக இத்தீர்மானத்தைக் கொள்ளக்கூடாதென்று கூறினார். திருத்தங்கள் யாவும் தோல்வியுற்றன. அசல் தீர்மானமே நிறைவேறியது.

## காங்கிரஸின் பிற தீர்மானங்கள்

பிரதி வருஷமும் காங்கிரஸ் தீர்மானங்களைக் காரியக் கமிட்டிதான் தயாரிக்கும். இவ்வருஷம் காரியக் கமிட்டி கலைந்தபடியாலும், சுபாஷ் போஸ் படுத்த படுக்கையிலிருந்த படியாலும் அவர் அனுமதியுடன் தமக்குத் தோற்றிய சில தீர்மானங்களைத் தயார்செய்து பண்டித ஜவாஹர்லால் நேரு நிறைவேற்றி வைத்தார்.

தேசிய கோரிக்கையான சுய நிர்ணய உரிமையைப பிரிட்டன் அளித்தல் வேண்டுமென்பது ஒரு தீர்மானத்தின் கருத்து.

பிரிட்டனின் வெளிநாட்டுக் கொள்கையைக் கண்டிப்பதாக மற்றொரு தீர்மான மூலம் தெரிவிக்கப்பட்டது.

எகிப்து தூதுக் கோஷ்டிக்கு வரவேற்பளித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

சீனத்துக்கு வாழ்த்துக் கூறுவதாக ஒரு தீர்மானம் நிறைவேறியது.

காங்கரஸின் சமஸ்தானக் கொள்கை பற்றியது மற்றோர் தீர்மானம்.

காங்கிரஸில் மலிந்துள்ள ஊழலை ஒழிப்பதற்கு வேண்டிய மாறுதல்களைச் செய்ய அ. இ. கா. கமிட்டிக்கு அதிகார மளித்திருப்பதாக ஒரு தீர்மான மூலம் தெரிவிக்கப்பட்டது.

## நேருவின் உருக்கமான பேச்சு

சூரத் காங்கிரஸுக்குப் பிறகு காங்கிரஸ் சரித்திரத்திலேயே திரிபுரி காங்கிரஸைப் போன்றதொன்று நடந்தது கிடையாதென்று சொல்லப்பட்டது. பலாத்காரமும் அடிதடியும் தலைவிரித்தாடவில்லை. மற்றப்படி குழப்பத்துக்கு வேண்டிய சகலமும் நிகழ்ந்தன என்று சிலர் கூறினர். பண்டித ஜவாஹர்லால் நேரு ஆணையின் தீர்மானம் பற்றிப் பேசுகையில் குழப்பம் ஏற்பட்டது. நேருவைப் பேச முடியாதவாறு பிரதிநிதிகள் கூட்டத்திலிருந்த சிலர் கூச்சலிட்டனர். ஆனால் பண்டித நேரு தம் நிலையைவிட்டு அசையவில்லை. சரத் சந்திரபோஸ் இடை நின்று சமாதானம் ஏற்படுத்தினர். பிறகு பண்டித ஜவாஹர் பேசியது வருமாறு:—

நீண்ட நேரம் இங்கே கூடியுள்ள உங்களது பொறுமையைச் சோதித்துவிட்டேன். நாம் நாளுக்குநாள் பலத்தில் அதிகரித்து வருகிறோம். நம்முன் நிற்கும் பெரிய போராட்டத்தைப்பற்றிப் பேசுகிறோம். காங்கிரஸ் இன்று முரட்டு ஸ்தாபனமாய் இருப்பதற்குக் காரணம் நீங்களே! நம்முடைய சுதந்திரத்துக்குக் குறுக்கே நிற்பது வகுப்பு வாதமே. அத்தகையது போன்றதொரு சச்சரவை நாமே

நமக்குள்ளாக நம்முடைய ஸ்தாபனத்துக்குள்ளேயே ஏற்படுத்திக் கொள்வதா?

சென்ற மாதத்திலே மகாத்மா காந்தி எழுதியுள்ள கட்டுரைகளை நீங்கள் படித்தீர்களானால் அதிலே ஒருவித மனோபீதியைக் காணலாம். அவற்றிலே கஷ்டத்தைக் காணலாம். மகாத்மா காந்தி எழுதியுள்ளதை நீங்கள் ஒப்புக்கொள்ளலாம்; அல்லது, ஒப்புக்கொள்ளாமலிருக்கலாம். ஆனால் அவர் தம் இதய பூர்வமாக எழுதுகிறார். ஏன் அப்படி? ஏனென்றால், வரப்போகும் போராட்டத்தை இன்று அவர் நன்கு அறிந்திருக்கிறார். அதற்கு அவர் தயார் செய்கிறார். அதற்குத் தேசமும் காங்கிரஸும் ஸித்தமாயிருக்க வேண்டுமென்று அவர் கூறுகிறார். அநாவசியப் பேச்சிலும் கீழ்ப்படியாமையிலும் நாம் மூழ்கியிருக்கக் காணும்பொழுது அவர் வருந்துகிறார். அவர் கட்டுப்பாடின்மை ஊழல் முதலியன பற்றி ஏன் சொல்கிறார்? நீங்களும் நானும் மகத்தான சோதனைக்கு உட்படுங்காலம் வந்துவிட்டது. ஆகவே ஒன்றுபட்டுக் கட்டுப்பாடாயிருங்கள். நமது தோழருள் சிலர் தம் இடம் விட்டு ஓடிவந்து கூச்சல்போடுவது மிகவும் வருத்தமளிக்கிறது. அவர்களும் நம்முடன் கூடிப் போர் அணிவகுத்துச் செல்லவேண்டியவர்களா யிருக்கிறார்கள்.

நம்மிலே பெரும்பாலோர் நமது வாழ்நாளின் பெரும் பாகத்தைத் தேச சேவையிலேயே கழித்துவிட்டோம். இவ்வளவு காலமாக நாம் தோளோடு தோள் உராய்ந்து கொண்டு ஊழியம் புரிந்தோம். இம்மாதிரியான சம்பவத்தை முதன் முதலாக இப்பொழுதே நான் காண்கிறேன். கால் நூற்றாண்டுக்குமேல் நான் இந்திய தேசிய காங்கிரஸ் கூட்டத்தினைக் கண்டு வருகிறேன். எவ்வளவோ காரியங்களை நான் கண்டிருக்கிறேன். ஆனால் இம்மாதிரியான ஒன்றைக் காணவேயில்லை.

நடந்த சம்பவத்தின் உண்மைப் பொருளை உணருமாறு உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். அது சிறிதாயிருப்பினும் பெரியதாயிருப்பினும் கவலையில்லை. நமக்குக் கோபம் வருவதும் சகஜம். எனக்குக் கூடக் கோபம் வருவதுண்டு. பின்னால் அதைப்பற்றி நான் வருந்துவதுண்டு. பின்னால் அதற்காக நான் மன்னிப்புக் கேட்பேன். எனது பலவீனம் எனக்குத் தெரியும். இம்மாதிரியான சம்பவங்களிலிருந்து நாம் நீதியைக் கற்றுக்கொள்வோம். இனி இம்மாதிரியான சம்பவங்களுக்கு இடங்கொடாதிருப்போமாக.

நான் இன்று பெரிய தலைவனாயிருப்பதற்குக் காரணம் நீங்களே. உங்களுக்கு விருப்பமானால் நீங்கள் என்னைக் கீழே தள்ளிவிடலாம். எல்லாம் உங்கள் கையில் இருக்கின்றன.

# விபரீத நிகழ்ச்சிகள்

## சுபாஷ் தேர்தல்

இந்த வருஷம் காங்கிரஸ் தலைவர் தேர்தலிலேயே குழப்பம் ஏற்பட்டது. சென்ற வருஷம் ராஷ்டிரபதியாயிருந்த பாபு சுபாஷ் சந்திரபோஸ் மறுபடியும் ராஷ்டிரபதியாகக் கூடாதென்பது மகாத்மாவின் எண்ணம். படேல் முதலியோர் சமஷ்டியை ஏற்க விரும்புவதாகவும், தாம் சமஷ்டியை எதிர்க்க விரும்புவதாகவும் சுபாஷ் கூறினார். சுபாஷைத் தலைவராகத் தெரிந்தெடுப்பது தேசத்துரோகமென்று படேல் கூறினார். இந்த விதமான குழப்பங்களுக்கிடையே பாபு சுபாஷ் சந்திர போஸ் ராஷ்டிரபதியாகத் தெரிந்தெடுக்கப்பட்டார்.

சுபாஷ் வெற்றி பெற்றது தமக்குத் தோல்வியென்று மகாத்மாகாந்தி அறிக்கை யிட்டார். இங்கிலையில் பழைய காரியக்கமிட்டி அங்கத்தவர் எல்லோரும் தமது பதவியை ராஜிநாமா செய்துவிட்டனர். இருசாராரிடமிருந்தும் அறிக்கைகள் பறந்தன. சுபாஷ் போஸுக்கு மகத்தான சுரங் கண்டது. காங்கிரஸ் காரியங்கள் ஸ்தம்பித்தன. சுரத்துடனேயே அவர் காங்கிரஸுக்கு விஜயம் செய்தார். காங்கிரஸ் மகாநாட்டில் எல்லோர் முகத்திலும் கவலையே தாண்டவமாடியது.

இவ்விதமாகப் பாபு சுபாஷ் போஸ் நோயுடன் போராடிக் கொண்டிருக்கையில், திரிபுரி காங்கிரஸ் நடைபெற்றது. திரி புரி காங்கிரஸ் முடிந்ததும் சுபாஷ் போஸ் காரியக்கமிட்டியை அமைக்கவில்லை. காரணம் உடல் நலமின்மையே. பந்த் தீர்மானம் மகாத்மாவின் இஷ்டப்படி காரியக்கமிட்டி அமைக்க வேண்டுமென்று கட்டுப்படுத்தியது. மகாத்மா ராஜ்கோட் விஷயத்தில் ஈடுபட்டிருந்தார். சுபாஷ் நோயில் ஈடுபட்டார்: ஆகவே, ஒருவரை யொருவர் சந்திக்க இயலாது போயிற்று. அதனால் காரியக்கமிட்டி ஏற்படுத்துவதில் தவக்கமுண்டா யிற்று. அறிக்கைகள் பறந்தன. பிரசாரங்கள் வலுத்தன. இப்படியும் அப்படியுமாகக் கடைசியில் கல்கத்தாவில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியைக் கூட்டுவதென்று ஏற்பாடா யிற்று. கல்கத்தாவில் தலைவர்களுக்குள்ளே எவ்வித சமரசமும் ஏற்படவில்லை. தலைவர்கள் கூடிக் கூடிப் பேசினார் கள். ஆயினும் பயன் விளையவில்லை. ஆகவே, சுபாஷ் பாபு தமது ராஷ்டிரபதிப் பதவியை ராஜிநாமா செய்ய வேண்டியதாயிற்று. அ. இ. கா. கூட்டத்தில் அவர் தம் ராஷ்டிரபதி பதவியை ராஜிநாமா செய்தார்.

## சுபாஷ் அறிக்கை

அப்போது ஸ்ரீ சுபாஷ் வெளியிட்ட அறிக்கை வரு மாறு :—

நண்பர்களே ! திரிபுரிக் காங்கிரஸில் புதிய காரியக் கமிட்டி அமைப்பது சம்பந்தமாக நிறைவேற்றப்பட்ட தீர் மானம் இன்னதென உங்களுக்குத் தெரியும். அதன் விவரம் வருமாறு :—

தலைவர் தேர்தல் சம்பந்தமாக ஏற்பட்ட பலவிதத் தப்பபிப்பிராயங்களால் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி

தன் கொள்கையைத் திட்டமாக வெளியிட வேண்டிய அவசியமேற்பட்டிருக்கிறது. கமிட்டி இதுவரை மகாத்மா காந்தியின் தலைமையில் கடைப்பிடித்த கொள்கையைப் பூரணமாக ஆதரிப்பதோடு இனியும் அவ்விதக் கொள்கையையே கடைப்பிடித்தல் வேண்டுமென்று விரும்புவதாகவும் சென்ற வருஷம் இருந்தக் காரியக்கமிட்டியிடம் நம்பிக்கை தெரிவிப்பதாகவும் அந்த அங்கத்தினர்கள்மீது தலைவர் பழி கூறியதுபற்றி வருந்துவதாகவும் கமிட்டி தெரிவிக்கிறது. அடுத்த வருஷத்தில் நெருக்கடி ஏற்படக் கூடுமாகையால் இந்த சமயத்தில் மகாத்மா காந்திதான் நாட்டைத் திறம்பட நடத்திச் செல்லக் கூடியவரென்றும் இக்கமிட்டி கருதுகிறது. அதனால் காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டி அவரது நம்பிக்கைக்கு உரியதாக விருக்கவேண்டும். எனவே, அவரது விருப்பப்படி அடுத்த வருஷக் காரியக்கமிட்டியை அமைக்கும்படி தலைவரை இக்கமிட்டி கேட்டுக்கொள்ளுகிறது.

திரிபுரிக் காங்கிரஸுக்குப் பிறகு இதுவரை புதிய காரியக்கமிட்டி அங்கத்தினர்களின் பெயரை வெளியிட முடியாமற் போனதற்காக நான் மிக்க வருந்துகிறேன். ஆனால், என்னையும் மீறிய சில காரணங்களால் இவ்விதம் நேரிட்டுவிட்டது. நான் தேக அசௌக்கியமாக விருந்ததால் மகாத்மாவை நேரில் காணமுடியவில்லை. அதனால் அவருடன் கடிதப்போக்கு வரவு நடத்தினேன். இதனால் எங்களுடைய அபிப்பிராயம்இன்னதென்த்தெளிவாயிற்று. ஆனால் ஓர் ஒப்பந்தம ஏற்பட இடமேற்படவில்லை. கடிதப்போக்கு வரவால் பயனில்லையென உணர்ந்துகொண்டேன். மகாத்மா டில்லியிலிருந்தபோது அவரைக் காண நான் என்னாலான வரை முயன்றேன். அம்முயற்சியும் பலிக்கவில்லை.

கல்கத்தாவுக்கு மகாத்மா வந்தபின் நாங்கள் நீண்ட நேரம் சம்பாஷித்தோம். ஆனால், துரதிஷ்ட வசமாக அதன் பயனாகப் பரிகாரம் ஒன்றும் ஏற்படவில்லை.

முன்னம் ராஜிநாமாச் செய்துவிட்ட காரியக் கமிட்டி அங்கத்தினர்களைச் சேர்க்காமல் நானே தனியாக வேறு ஒரு காரியக் கமிட்டியை அமைக்க வேண்டுமென மகாத்மா எனக்கு யோசனை கூறினார். இந்த யோசனைப்படி நான் நடப்பதற்கில்லை. அதற்குப் பலகாரணங்களுண்டு. இரண்டு காரணங்களை மட்டும் எடுத்துச்சொல்கிறேன்.

## எப்படிச் சொல்வேன்?

காந்தியடிகளின் யோசனைப்படி நடப்பதானால் அது பந்த் தீர்மானத்துக்கு விரோதமாகும். காந்திஜியின் விருப்பப்படியும் அவரது நம்பிக்கைக்குப் பாத்திரமாக விருக்கக் கூடியவாறும் ஒரு கமிட்டி அமைக்கவேண்டு மென்பதே பண்டித பந்த் தீர்மானத்தின் நோக்கம். என் இஷ்டப்படி நான் ஒரு கமிட்டி நியமித்துவிட்டால் அது காந்திஜீயின் நம்பிக்கைக்குப் பாத்திரமானது என்று உங்களிடம் வந்து சொல்லமுடியாது.

இனி நெருக்கடியான சந்தர்ப்பங்கள் பல ஏற்படலாம். இந்த நிலைமையில் காங்கிரஸ்காரர்களில் பெரும்பாலாரது நம்பிக்கைக்கும் உறைவிடமாக உள்ள ஐக்கிய சபையாகக் காரியக் கமிட்டியிருந்தால் சவுகரியமாக விருக்கு மென நான் அபிப்பிராயப் பட்டேன். இதனால் மகாத்மாவின் ஆலோசனையை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. திரிபுரி காங்கிரஸ் தீர்மானப்படி ஏற்பட்ட பொறுப்பை அவர் ஏற்றுக்கொண்டு காரியக்கமிட்டி அங்கத்தினர்களை நியமிக்கவேண்டும் என்றும், எவ்விதக் கமிட்டி அமைத்தாலும், நான் அதை ஏற்றுக்கொள்ளக் கடமைப்பட்

டிருப்பதாகவும், பண்டித பந்த் தீர்மானத்தை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென நான் உறுதிகொண்டிருப்பதாக வும் கூறினேன். காந்திஜி அவ்விதம் காரியக்கமிட்டிக்கு அங்கத்தினர்களை நியமிக்க முடியாதுபோனது நமது துரதிருஷ்டமேயாகும்.

நான் இந்தச் சந்தர்ப்பத்தில் தலைவனாக விருப்பதால் அதற்கு ஒரு சங்கடமாக விருக்குமென நினைக்கிறேன். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி நியமிக்க விரும்பும் ஒரு காரியக்கமிட்டியில் நான் இருப்பது தகாதென்ற எண்ணமும் இருக்கலாம். புதிய தலைவர் ஒருவர் இருந்தால் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி சுலபமாகக் காரியத்தைச் சீர்படுத்தலாம் என்ற அபிப்பிராம் இருந்தாலும் இருக்கும்.

ஆகவே, நான் தீர்க்கமாக ஆலோசித்து உங்களுக்கு உதவ வேண்டுமென்ற நோக்கத்துடனே ராஜிநாமாவை உங்களிடம் இப்போது சமர்ப்பித்திருக்கிறேன்.

எனக்குப் போதிய அவகாசமில்லாததால் நான் சுருக்க மாகவே ஓர் அறிக்கை தயாரித்திருக்கிறேன். அப்படியிருந் தாலும் இந்த சுருக்கமான அறிக்கையிலும் இப்போதுள்ள நிலைமையைச் சரிவர விளக்கியிருப்பதாகவே நான் நம்பு கிறேன்.

## துரதிர்ஷ்டம்

கடைசி முயற்சியாக நான் அவரை அணுகிப் பேசிய போது அவர் பழைய காரியக் கமிட்டியில் இருந்த பிரபல அங்கத்தினர்களும் நானும் கலந்து ஒரு சமரஸத்துக்கு வழி தேடலாம் எனக் கூறினார். அதற்கும் நான் இணங்கினேன். நாங்கள் அவ்வழியிலும் முயன்று பார்த்தோம். இந்த முயற்சியாவது பலித்திருந்தால் எங்களது ஒப்பந்தத்தை அங்கீகரிக்கும்படி இப்போது உங்கள் முன்னால் வந்து கேட்

டிருப்போம். ஆனால் அவ்விதமும் நடக்கவில்லை. பல மணி நேரம் விவாதித்தும் ஒரு சமரஸமும் ஏற்படவில்லை. இது துரதிர்ஷ்டமாகும். புதிய காரியக்கமிட்டியை அமைத்து அதன் விவரத்தை வெளியிட நான் இயலாமலிருக்கிறேன் என்பதைத்தான் மிக்க வருத்தத்துடன் நான் உங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இதைத் தவிர வேறு வழியில்லை.

## நேருவின் பேச்சு

சுபாஷ் தமது அறிக்கையை முடித்ததும் ஸ்ரீ ஜவஹர்லால் நேரு ஒற்றுமையின் அவசியம்பற்றி உருக்கமான பிரசங்கத்தைச் செய்தார். அவர் கூறியதாவது:—

சபை முன்பு இரு அறிக்கைகள் சமர்ப்பிக்கப்பட்டிருக்கின்றன. ஒன்று மகாத்மா காந்தியினுடையது; மற்றொன்று ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸினுடையது. நமக்குப் பல கஷ்டங்களிருக்கின்றன. அவற்றை நாம் இன்னும் தீர்க்கவேண்டியவர்களாக இருக்கிறோம். நமது கஷ்டங்களை எல்லாம் தீர்க்க இயலாவிட்டால் நாம் கல்கத்தாவை விட்டுப் புறப்பட முடியாது. இவற்றைத் தீர்த்தால் நமது வழி சுலபமாக ஆகும்.

சென்ற இரண்டு அல்லது மூன்று மாதங்களில் காங்கிரஸ் மெம்பர்கள் ஒருவருக்கொருவர் வெகுவாக மண்ணைவாரி இறைத்துச் சச்சரவு செய்துகொண்டு வந்திருக்கிறார்கள். இந்தச் சச்சரவு நமது கவனத்தைச் சாமான்ய வேலைகளில் செலுத்தவொட்டாதபடி தடுத்திருக்கிறது. இது சற்றும் ஆச்சர்யத்தை உண்டாக்கவில்லை. காங்கிரஸ் பெரிய ஸ்தாபனமாக வளர்ந்துவிட்டது. இதனால் இதன் மெம்பர்களுள், சென்ற பல மாதங்களாக நடக்கும் வாக்குவாதம் நமக்குச் சற்றும் ஆச்சர்யத்தை விளைவிக்கவில்லை. நமக்குள் இவ்

வளர்வு மனத்தாங்கலை உண்டாக்கிய பிரச்னைகளை எல்லாம் பற்றி நீங்கள் ஆலோசித்துப் பார்க்கவேண்டுமென்று உங்களை வேண்டிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் இதைப்பற்றி அமைதியாக ஆலோசிக்கவேண்டும். நாம் நமது சச்சரவைப் போக்க நம்மால் இயன்றதை எல்லாம் செய்யவேண்டும். நாம் பின்னால் நடக்கவேண்டியதைப் பற்றியே ஆலோசிக்க வேண்டும். முன் நிகழ்ந்தவற்றை மறக்கவேண்டும். தற்போது ஏற்பட்டுள்ள நெருக்கடியைப்பற்றி ஆலோசிக்க வேண்டும்.

தற்போது உலகில் நெருக்கடி ஏற்பட்டு வருகிறது. நாம் அடுத்தபடியாக எப்பொழுது கூடுவோமென்று சொல்ல என்னால் இயலாது.

## யுத்தம்

எந்த சமயத்தும் உலகில் மகாயுத்தம் ஏற்படலாம். யுத்தத்தில் இந்தியா கலக்கவேண்டுமென்று நாம் விரும்பவில்லை. நமது தற்காலப் பிரச்னைகளை எல்லாம் நாம் ஆற அமர யோசிக்கவேண்டும்.

மகாயுத்தம் ஏற்பட்டால் தோன்றக்கூடிய பிரச்னையையும் நாம் ஆலோசித்துப் பார்க்கவேண்டும். இக்கூட்டத்தில் ஆலோசிப்பதற்குப் பல தீர்மானங்கள் கொண்டுவரப்படுமென்று நோட்டீஸ் கொடுக்கப் பட்டிருக்கின்றது. அவற்றைப்பற்றி ஆலோசிக்க நமக்கு அவகாசமில்லை. காங்கிரஸின் பலம் வெகுவாக அதிகரித்திருக்கிறது. அது மிக்க வல்லமை வாய்ந்த ஸ்தாபனமாகிவிட்டது. நமது விரோதிகளும் சும்மா இருக்கவில்லை. அவர்கள் நம்மை எதிர்ப்பதற்காக ஒன்றுபட முயற்சி செய்கிறார்கள்.

## தடையாயிருப்பவை

வகுப்புப் பிரச்னையும் சமஸ்தானப் பிரச்னையும் நமது முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கின்றன. பலம்

பெற்ற போதிலும் நமது கஷ்டங்கள் குறையவில்லை. ஆனால் நமது கஷ்டங்களை அதிகரித்திருக்கின்றன. நாம் இப்பிரச்னைகளை எல்லாம்பற்றி அமைதியாக ஆலோசித்துப் பார்க்க வேண்டும்.

## வேற்றுமைகளை விடுக !

நாம் நமது வேற்றுமைகளைக் கைவிட்டு நெருக்கடியான இச்சமயத்தில ஒன்றுபட்டு நிற்கவேண்டும். நமக்குமுன் ஸ்ரீசுபாஷ் பாபுவின் அறிக்கை இருக்கிறது. நமது வேற்றுமைகள் கொள்கைகளைப் பற்றியவை அல்ல. அவை அற்பமானவை யாகும். இதனால் நீங்கள் வாக்குவாதங்களில் ஈடுபடக் கூடாதென்று நான் விரும்புகிறேன். நெருக்கடி ஏற்படும்பொழுது எல்லாம் நாம் ஒன்றுபட்டிருந்து வந்திருக்கிறோம். இது நமது பழைய அனுபவமாகும். தற்போது முட்டுக்கட்டை போட்டாற் போன்ற நிலை ஏற்படுவதற்குக் காரணமாக இருந்த பிரசனையை நான் ஆராய்ந்திருக்கிறேன். எந்தப் பிரச்னையைப் பற்றியும் தத்துவங்கள் சம்பந்தமாக சுபாஷ் பாபுவுக்கும் மகாத்மா காந்திக்கும் வேற்றுமை எதுவுமில்லை என்ற முடிவுக்கு நான் வநதிருக்கிறேன்.

சுபாஷ் பாபுவின் அறிக்கையிலிருந்து இவர் திரிபுரம் காங்கிரஸில் நிறைவேறிய பண்டித பந்த் தீர்மானத்தை நிறைவேற்றிவைக்கும் நோக்கத்துடன் மகாத்மா காந்தியை அணுகியிருப்பது நமக்குத் தெரிகிறது. இத்தீர்மானத்தை நிறைவேற்றிவைப்பதில் மகாத்மா காந்திக்குள்ள கஷ்டங்களும் நமக்குத் தெரியவந்திருக்கின்றன. இவற்றின் காரணமாக பாபு சுபாஷ் போஸ் தமது ராஜிநாமாவை வாபீஸ் பெறவேண்டுமென்று நான் தற்போது அவரை வேண்டிக்கொள்ளுகிறேன். அவரை அவரது ராஜி

நாமாவால் ஏற்படக்கூடிய பிரச்னையை ஆலோசித்துப் பார்க்கும்படியும் நான் வேண்டிக்கொள்ளுகிறேன்.

## பிளவு வேண்டாம்?

காங்கிரஸில் கட்சி உணர்ச்சியோ அன்றிப் பிளவோ இருக்கக்கூடாதென்று நான் விரும்புகிறேன். காங்கிரஸ் போன்றதொரு ஸ்தாபனத்தின் மெம்பர்களுள் ஏற்படும் வேற்றுமைகளால் ஸ்தாபனம் பலஹீனமடையும். ஸ்தாபனம் விடாமல் முன்னேறி வருவதற்கு இணங்கியதாக இது இருக்கமுடியாது.

## நகைக்கு இடங்கோடேல்

நமது விரோதிகள் நமது வேற்றுமைகளையும் அதனால் நம்மிடை ஏற்படும் பலவீனத்தையும் கண்டு மகிழ்ச்சியடைவதைக் காண நான் விரும்பவில்லை.

## நெருக்கடி தீர வழி

காரியக்கமிட்டியை ஏற்படுத்துவது சம்பந்தமாக நமக்குள்ள கஷ்டங்களைப் போக்குவதற்காகப் பழைய கார்யக்கமிட்டி மெம்பர்களை இன்னும் அப்பதவிகளிலிருந்து வேலை பார்த்து வரவேண்டுமென்றும் நமது நெடுநாளைய வழக்கத்திலிருந்து நாம் பிறழக்கூடாதென்றும் நாங்கள் விரும்புகிறோம். நமக்குமுன் ஏற்பட்டுள்ள நெருக்கடியை நாம் எப்படியேனும் சமாளிக்கவேண்டும்.

## நடு ஆற்றிற் படகை மாற்றுவதா?

நடு ஆற்றில் படகை மாற்றுவது விவேகமாக இருக்குமென நான் நினைக்கவில்லை. நமது பழைய சகாக்களான சேத் ஜம்னுலால் பஜாஜும், ஜெயராமதாஸ் தௌலத்

ராமும் புதிய காரியக் கமிட்டியில் சேரக்கூடிய நிலைமையில் இல்லை. ஒருவர் (சேத்பஜாஜ்) சிறையிலிருக்கிறார். மற்றொருவர் (ஜெயராமதாஸ்) தேக அசௌக்கியமாக இருக்கிறார். இவ்விருவருக்குப் பதிலாகப் புதிதாக இருவரை அக்கிராசனர் நியமிக்கவேண்டுமென்று நான் யோசனை கூறுகிறேன். முடிவில் நீங்கள் எல்லோரும் அக்கிராசனரை அவரது ராஜீநாமாவை வாபீஸ் பெறும்படி வற்புறுத்த வேண்டுமென்றும் நான் கூறியபடி புதிய கார்யக்கமிட்டியைத் திருத்தியமைத்துக் காங்கிரஸ் வேலையை நடத்தவேண்டுமென்றும் யோசனை கூறுகிறேன்.

## தீர்மானம்

சபை இடைவேளைக்குக் கலையுமுன்ப பண்டித ஜவஹர்லால் நேரு பின்கண்ட தீர்மானத்தைப் பிரேரித்தார் :—

" ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ் தமது ராஜிநாமாவை வாபீஸ் பெறவேண்டுமென்றும், பழைய கார்யக்கமிட்டி மெம்பர்களையே தமது புதிய கார்யக்கமிட்டி மெம்பர்களாக அவர் திரும்ப நியமிக்க வேண்டுமென்றும், அவரை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் இக்கூட்டம் வேண்டிக்கொள்கிறது. "

சபை தம்மைப்பற்றிய விஷயங்களைப் பற்றி விவாதிக்கையில் தாம் தலைமைவகிப்பது தமக்குச் சங்கடமாக இருக்குமென்றும் இதனால் ஸ்ரீமதி சரோஜனி அக்கிராசனம் வகிக்க வேண்டுமெனக் கோருவதாகவும் சுபாஷ் கூறினார்.

## சரோஜனி தேவி

சுபாஷ் பாபு பேசி முடித்தபின் தலைமை வகித்திருந்த ஸ்ரீமதி சரோஜனி தேவி, பண்டித ஜவஹர் கொண்டுவந்த தீர்மானத்தைப்பற்றிக் கூறி அவர் உண்மையான எண்ணத்

துடன்தான் அந்தத் தீர்மானத்தைக் கொண்டுவந்ததாகவும் அதில் சந்தேகப்பட வேண்டியதேயில்லை யென்றும், சுபாஷ் பாபு ஒவ்வொரு வருஷமும் மாறுதல் இருக்கவேண்டுமென்றும் புதிதாகவும் சிலர் காரியக்கமிட்டியில் சேர்க்கப்பட வேண்டுமென்றும் கூறியதைத் தாம் அங்கீகரிப்பதாகவும், காங்கிரஸிலுள்ள எல்லாக் கட்சியினருக்கும் சரிசமமான சந்தர்ப்பம் அளிக்கவேண்டியது அவசியமென்றும், ஆனால் அதைச் செய்வதிலும் ஒரு வழியிருப்பதாகவும் அதை அவசரத்தில் செய்துவிடுவதில் பயனில்லை யென்றும் கூறினார். மேலும் அவர் பேசியதாவது:—

சேத் ஜம்னாலால் பஜாஜும் ஸ்ரீமான் ஜெயராம்தாஸ் தௌலத்ராமும் தேக அசௌக்கியமாக விருப்பதால் அவர்களுக்குப் பதிலாக நியமிக்கப்படுபவர்கள் சுபாஷ் பாபுவின் பிரியப்படி நியமிக்கப்படுவார்கள் எனப் பண்டித ஜவஹர் கூறியதைக் கவனிக்கவேண்டும். மாறுதல் செய்யவேண்டிய சமயம் வரும்வரை தான் பழைய கமிட்டியை அப்படியே நியமித்துக் கொள்ள வேண்டுமெனக் கேட்கிறார்கள். சீக்கிரத்தில் மாறுதல்களையும் செய்யலாம்.

காங்கிரஸ் மகாசபைத் தலைவராக விருந்து சுபாஷ் பாபு காரியங்களை நடத்திச்செல்ல வேண்டுமென நாம் யாவரும் விரும்புகிறோம். அவரோடு ஒத்துழைக்கவும் நாங்கள் விரும்புகிறோம். அவரும் எங்களுடன் ஒத்துழைக்கவேண்டுமெனக் கோருகிறோம். காங்கிரஸ் தலைவர் அநாமதேயப் பேர் வழியல்லர். காங்கிரஸின் திட்டமான கொள்கையையும், வேலைத் திட்டத்தையும் எடுத்துச் சரிவர விளக்கக்கூடியவர் அவரே. நமது லக்ஷியம் நிறைவேற நாம் எப்போதும் சுபாஷ் பாபுவுடன் ஒத்துழைக்கச் சித்தமாக விருக்கிறோம்.

## வேண்டாம்

பண்டித நேருவின் பிரேரணைகளுக்குச் சுமார் 12 திருத்தப்பிரேரணைகள் அனுப்பப்பட்டிருக்கின்றன. அவை ஒன்றையும் சபையில் பிரேரிக்காமலிருக்கும்படியும் பிரசங்கங்கள் எதுவும் செய்யாமலிருக்கும்படியும் நான் சபையினரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

காங்கிரஸ் தலைவராக விருந்து காரியங்களைக் கவனிப்பதாகச் சுபாஷ் பாபுவிடமிருந்து உறுதி கிடைக்கவேண்டும். அவர் முன்வந்து அவரது நிலைமையை விளக்கட்டும்.

## நான் ஒன்றும் சொல்வதற்கில்லை

ஸ்ரீமதி சரோஜனியின் விண்ணப்பத்துக்குச் சுபாஷ் பாபு அளித்த பதிலாவது :—

இக்கூட்டத்தின் ஆரம்பத்தில் நான் வெளியிட்ட அறிக்கையிலே எனது நிலையை நன்கு விளக்கிவிட்டதாக எண்ணியிருந்தேன். அதில் குறிப்பிட்டதைவிட வேறு அதிகமாக நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. உங்களுக்கு உதவுவதற்காகவே நான் ராஜிநாமா செய்தேன். முடிவாக நான் ஒரு பதில் சொல்லிவிட வேண்டுமென்றால் அது இப்போது முடியாது. அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி இத் தீர்மானத்தை எவ்விதம் நிறைவேற்றுகிற தென்பதை நான் முதலில் அறியவேண்டும். இக்கமிட்டி என்ன தீர்மானம் நிறைவேற்று மென்பதும் எனக்குத் தெரியாது. அது தெரியும்வரை முடிவான ஒரு பதிலும் நான் சொல்ல முடியாது.

அதோடு நான் எனது நிலைமையைத் தெளிவாக எடுத்துச் சொல்லிவிட்டேன். நான் விட்டுக் கொடுக்கவோ, அன்றி சமரஸமாகப் போகவோ மறுத்ததாக ஒருவரும்

சொல்லமுடியாது. நான் ஒற்றுமை வேண்டுமென்றே விரும்புகிறேன். ஆனால் பலன் தரத்தக்க ஒற்றுமை வேண்டுமென்பதே என் அபிப்பிராயம்.

## தீர்மானம் வாபீஸ்

பண்டித ஜவஹார் சபையின் அனுமதியோடு தாம் தமது பிரேரணையை வாபீஸ் வாங்கிக்கொள்வதாக அறிவித்தார். அவர் கூறியதாவது :—

நான் கொண்டுவந்த பிரேரணையை சுபாஷ் பாபு அங்கீகரிக்கிறாரா என்று அறிய விரும்பினேன். ஆனால் சுபாஷ் பாபு இப்போது சொன்னதைக் கவனித்தால் அவர் அதை அங்கீகரிக்கவில்லையெனத் தெரிகிறது.

ஆகவே, அதை வாபீஸ் வாங்கிக்கொள்ள எனக்கு அனுமதி கொடுக்கும்படி சபையினரை வேண்டிக்கொள்ளுகிறேன்.

## காரியக் கமிட்டிபற்றி போஸ்

பண்டித ஜவஹார்லால் பேசிய பிறகு சுபாஷ் பாபு ஓர் அறிக்கை வெளியிட்டார். அதன் விவரம் பின்வருமாறு :—

சபை முன் இப்போது ஆலோசனைக்கு வந்திருக்கும் தீர்மானம் என்னைப்பற்றியதாக விருக்கிறது. அதைப்பற்றி சில வார்த்தைகள் நான் கூறினால் விவாதத்துக்கு உதவியாக விருக்குமெனக் கருதுகிறேன். எனது ராஜிநாமாவை வாபீஸ் வாங்கிக் கொள்ளவேண்டுமெனப் பண்டித ஜவஹார் ஒரு தீர்மானம் கொண்டுவந்தது எனக்குப் பெருமையைத் தருகிறது. நான் அரை மனதுடன் ராஜிநாமாவை அனுப்பவில்லை. ஒரு முடிவுக்கு வருமுன் தீர்க்கமாக அதைப்பற்றி யோசிக்க வேண்டியது அவசியம். ஆகையால் நேற்று மாலை விவாதம் ஒத்திவைக்கப்பட்டது நன்மையே என்று சொன்னேன்.

பண்டித நேரு கொண்டுவந்துள்ள பிரேரணை மகாத்மாவும் காரியக்கமிட்டியில் முன்னம் இருந்த அங்கத்தினர்களும் கூறிய யோசனையைத்தான் வற்புறுத்துகிறது. எப்போதும் சாதாரணமாக மகாத்மாவின் வார்த்தையை நான் வேதவாக் காகக் கொள்வதுண்டு. ஆனால் கொள்கையைப் பொறுத்த விஷயங்களில் அவரது ஆலோசனையையும் புத்திமதியையும் என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

மகாத்மா காரியக் கமிட்டிக்கு அங்கத்தினர்களை நியமிக்கும் விஷயத்தில் நமக்கு உதவ முடியாத நிலையில் இருக்கையில் காங்கிரஸ் விதிகளுக்கேற்பத்தான் நாம் ஒரு பரிகாரம் தேடவேண்டும். ஆகவே, உங்களுடைய அபிப்பிரா யத்தை நான் கேட்கிறேன். தற்சமயம் காரியக் கமிட்டி எவ்விதமிருக்க வேண்டும்? சென்ற வருஷம் ஹரிபுராவில் நான் முன்கமிட்டியில் மூன்று மாறுதல்கள் செய்தேன். ஒவ்வொரு வருஷமும் புதிதாகச் சிலர் சேர்க்கப்படவேண்டு மென்பதே என் அபிப்பிராயம். கொள்கையில் மாறுதல் இல்லாமல் தொடர்ந்தாற்போல் நடத்த பழைய அங்கத் தினர்களில் பெரும் பகுதியினர் கமிட்டியில் இருக்கலாம் என்பதே என் அபிப்பிராயம்.

இந்தியாவைப் போன்ற பெரியதொரு நாட்டில் காங் கிரஸின் உயர்தர நிருவாக சபை ஒரு கோஷ்டியினருக்கு மட்டும் சொந்தமாக விருக்கக்கூடாது. சாதாரண நிலையில் ஒவ்வொரு வருஷமும் ஏதாவது மாறுதல்கள் இருக்க வேண்டும்.

கிரேட் பிரிட்டன் முதலிய நாடுகளில் ராஜீயக் கட்சிகள் நன்கு அமைக்கப்பட்டிருக்கின்றன. அங்குகூட நெருக்கடி யான சந்தர்ப்பங்களில், கட்சிக் கொள்கைகள் மாறி, விரோதி களாக இருந்தவர்களும் ஒரே கமிட்டியில் ஸ்தானம் பெறு

கிறார்கள். கலப்புக் கமிட்டிதான் காலத்துக்கேற்றது. பிரிட்டிஷார், பிரெஞ்சுக்காரர் ஆகியவர்களைவிட நாம் தேசாபிமானத்தில் குறைந்தவர்களா? அவர்களால் ஆகும் காரியம் நம்மாலாகாதா? அவர்களைவிட நாம் தாழ்ந்தவர்கள் என்று நான் ஒருகாலும் சொல்லமாட்டேன். சரியான கமிட்டி அமைக்கவேண்டுமானால் அதில் பற்பல கட்சிப் பிரதிநிதிகளும் இருக்கவேண்டும். கொள்கையில் மாறுதல் இல்லாமலிருக்கப் பழைய அங்கத்தினர்களுக்கு மெஜாரிட்டி கொடுத்து விடலாம். புதியவர்களுக்கு இடம் கொடுக்கவில்லையானால் கமிட்டியின் அதிகாரமும் மதிப்பும் குறையும். நெருக்கடியான காலத்தில் கிரேட் பிரிட்டன் போன்ற நாடுகளில் ஒரு தனிக்கட்சி மந்திரி சபையைக் கலைத்துவிட்டு தேசிய மந்திரி சபையாகக் கூட்டுக்கட்சி அமைப்பது சகஜமாக விருக்கிறது. அவ்வித நிலைமை இங்கும் ஏற்படட்டில்லையா? காங்கிரஸிலும் அகில இந்தியக் கமிட்டியிலும் பலவித அபிப்பிராய பேதங்களிருக்கின்றன. அப்படியிருந்தும் நாம் பல விஷயங்களில் ஒத்துப்போகவில்லையா? காங்கிரஸ் லக்ஷியத்தை ஆதரிக்கும் நாம் அனைவரும் ஏகாதிபத்தியக் கொள்கைக்கு எதிரானவர்களல்லவா? இவ்விஷயத்தில் காங்கிரஸ்காரர்கள் அனைவரும் ஒரே தரப்பினர் அல்லவா? சில சமயங்களில் "ஒரே தன்மை" என்பதற்குக் குறுகிய அர்த்தம் நாம் கொடுத்துவிடுகிறோம்.

## காலத்துக்கேற்றபடி நடக்க வேண்டாமா?

1921-ஆம் வருஷத்துக்குப் பிறகு காங்கிரஸ் அமைப்பு எவ்வளவோ மாறியிருக்கிறது. அதற்கேற்பக் காரியக்கமிட்டியையும் திருத்தியமைக்க வேண்டாமா? காங்கிரஸுக்குத் தக்க பிரதிநிதி சபையாகக் கமிட்டி யிருக்கவேண்டும். காங்கிரஸ் தலைவர் தேர்தலின்போது வெளிப்பட்ட தன்மையை

யும் நாம் மறந்துவிடக் கூடாது. காலத்துக் கேற்றபடி நாம் நடககவேண்டாமா? உள்ள நிலையை அறிந்து நாம் அதற் கநுகுணமாகச் சரிப்படுத்திக் கொள்ளவேண்டும்.

## நான் தலைவனாகவிருக்க வேண்டுமானால்

இன்று அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் மனப் போக்கு எவ்விதமிருக்கிற தென்பது எனக்குத் திட்டமாகத் தெரியாது. ஆனால் நான் பணிவுடன் ஒரு விஷயம் தெரி வித்துக் கொள்கிறேன்.

நான் தலைவனாக விருக்கவேண்டுமென நீங்கள் விரும்பி னால் நான் மேலே குறிப்பிட்ட அபிப்பிராயத்தைச் சற்றுக் கவனித்து அங்கீகரிக்க வேண்டும். அவ்விதம் செய்யப் பிரியமில்லையானால், தலைவர் பதவிப் பொறுப்பிலிருந்து என்னை விடுவித்து விடுங்கள்.

இனி நெருக்கடியான சந்தர்ப்பங்கள் ஏற்படவிருக்கின் றன. வெளிநாட்டில் ஏற்பட்டுவரும் நெருக்கடியிலிருந்து நாம் கஷ்டமின்றி வெளிப்பட வேண்டுமானால் நாம் யாவரும் ஒன்றுபட்டு உழைக்கவேண்டும். இதற்காக என்னாலான உதவியைச் செய்ய நான் எப்போதும் சித்தமாக விருக் கிறேன்.

## தலைவனாயில்லாவிட்டால் என்ன?

நான் தலைவனாயில்லாவிட்டால் என்ன? எந்தக் காலத் திலும் நான் காங்கிரஸுக்குத் தொண்டு செய்யத் தயாராக விருக்கிறேன். என்னால் இயன்றதை எப்போதும் நாட்டுக் காகச் செய்வேன். இந்தியாவின் ராஜீய, பொருளாதார அபி விருத்திக்காக நடக்கும் பெரியதொரு போராட்டத்தில் ஒரு வீரனாகக் கலந்துகொண்டு வேலைசெய்ய என்னிடம் போதிய தேசாபிமானமும் கட்டுக்கடங்குந் தன்மையும் இருக்கின்றன.

## நரிமன் முதலியோர் கண்டனம்

கே.எப்.நரிமன் முதலியோருள்ளிட்ட 30 பேர் சேர்ந்து கீழ்க்கண்ட அறிக்கையை அ. இ. கா. கூட்டத்தில் சமர்ப்பித்தனர்.

ஏப்ரல் 30-ந்தேதிக் கூட்டமானது நேர்மையற்ற, பொறுப்பற்ற முறையில் நடத்தப்பட்டது. அதனை நாங்கள் கண்டிக்கிறோம்.

முதன் முதலாக நாங்கள் ஆட்சேபிப்பது ஒன்றுண்டு. அதாவது தலைவர் ராஜிநாமா விஷயமாகும். ஜனநாயகம் நிலவும் பொதுஜன ஸ்தாபனம் எதிலும் பிரதிநிதிகளின் அபிப்பிராயத்தை வாக்கெடுப்பது வழக்கம். ஆனால் அதற்கு மாறாகக் காங்கிரஸ் தலைவர் சுபாஷ் சந்திரபோஸ் ராஜிநாமா விஷயத்தை அ. இ. கா. கமிட்டியில் ஓட்டுக்கு விடாததை நாங்கள் ஆட்சேபிக்கிறோம். தலைவரது அறிக்கை பல பிரச்னைகளைக் கிளப்பியது. அவற்றையெல்லாம் விவாதிப்பதற்கு இடமளிக்கப்படவில்லை. ஜவாஹர்லால் நேருவின் தீர்மானத்துக்குப் பலர் திருத்தங் கொணர்ந்தது எதனைக் குறிக்கிறது? அவ்விஷயம் பற்றிப் பலரும் விவாதிக்க விரும்புகின்றனர் என்பதையல்லவா? திருத்தங் கொண்டுவர விரும்புவோர் மறுநாள் 12மணிக்கு முன்னதாக அறிவிக்கவேண்டுமென்று தலைவி சரோஜனி கூறியதால்தானே மேற்கண்ட திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. திடீரென்று மாறுதல் ஏற்பட்ட காரணம் யாது? தீர்மானத் திருத்தங்கள் விவாதிக்க வேண்டிய நேரம் வந்தபொழுது இவ்விஷயம்பற்றி மேலும் விவாதிக்க வொட்டாமல் தடுத்த காரணம் என்ன? தலைவர் தமது ராஜிநாமாவைத் திரும்பப் பெறப்போகிறாரா இல்லையா என்ற ஒரே கேள்வி நேரடியாகக் கேட்கப்பட்டது. கூட்டத்தின் மனப்பான்மையைத் தாம் தெரிந்துகொள்ளாமல்

ஏதும் சொல்லமுடியாதென்று போஸ் கூறவும், பண்டிதர் தம் தீர்மானத்தைத் திரும்பப் பெற்றுக்கொண்டார். அதுபற்றி மேற்கொண்டு விவாதம் நிறுத்தப்பட்டது. அப்பொழுது தலைமை வகித்த தற்காலிகத் தலைவி யாது கூறினார்? தலைவர் போஸ், தமது ராஜிநாமாவைத் திரும்பப் பெறுதற்குச் சம்மதியாதது, அவர் தம் பதவியிலிருந்து விலகுவதே யாகுமாதலின் இதுபற்றி ஓட்டுக்கு விடவேண்டுவதில்லை யென்று கூறினார்.

மேற்குறித்த நடவடிக்கை நேர்மையானதன்று. அது பொது ஸ்தாபனங்களில் அநுஷ்டிக்கப்படும் நடைமுறைக்கு முற்றும் முரண்பட்டது.

புதிய தலைவர் தேர்தலில் கையாளப்பட்ட நேர்மையற்ற-முறையற்ற - செயல்களையும் நாங்கள் கண்டிக்க விரும்புகிறோம். பழைய தலைவரின் ராஜிநாமா ஏற்றுக்கொள்ளப்படுதற்கு முன்னால் புதிய தலைவர் ஒருவரைத் தெரிந்தெடுக்கப்புறப்படுவது நேர்மையன்று; ஸ்தாபன விரோதமானது.

தலைவர் தமது பதவியை உதறிவிட்டதாகக் கொண்டாலும் காங்கிரஸ் சட்டப்படி நடப்பதே சால்புடைத்து. தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர் தமது பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டால், பாலட் மூலம் பிரதிநிதிகளும் மாகாண கமிட்டி வழியாகத் தேர்ந்தெடுத்தல் வேண்டும். அது முடியாவிடில் அ. இ. கா. கமிட்டி தேர்ந்தெடுக்கலாம். காங்கிரஸ் சட்டப்படி செய்வது முடியாத காரியமன்று என நாங்கள் கருதுகிறோம். ஆனால் அந்த ஜனநாயகமுறை கைவிடப்பட்டதன் காரணம் என்ன?

சமீபத்தில் பிரதிநிதிகள் தேர்ந்தெடுத்த அதே தலைவரை மறுமுறையும் தேர்ந்தெடுத்து விட்டால் என்

செய்வது என்ற பயம் தவிர வேறு ஒன்றுமில்லை என்று சொல்லவும் வேண்டுமோ ?

தற்காலிகப் பொதுக் காரியதரிசி தேர்ந்தெடுக்கப்பட்ட காரியதரிசியல்லர் என்று சொல்லப்பட்டது. அந்தக் காரிய தரிசி அறிவித்துத்தானே பிரதிநிதிகள் திரிபுரி காங்கிர ஸுக்குக் கூடினார்கள் ? இதுவரை யாரும் அதனை ஆட்சே பிக்கவில்லையே ! ஆகவே மேற்கண்ட சாக்குப் போக்குகள் ஜனநாயக முறையைத் தவிர்ப்பதற்குக் காட்டப்பட்ட வையே.

இந்த முறையற்ற - பொறுப்பற்ற - நேர்மையற்ற - ஜனநாயக முரண்பாடுள்ள-செயலை நாங்கள் கண்டிக்கிறோம். புதிய தலைவர் தேர்தல் சட்ட - ஸ்தாபன - விரோதமான தென்று அறைகூவிச் சொல்கிறோம்.

## புதிய தலைவர்

பாபு சுபாஷ் சந்திரபோஸ் தமது பதவியை ராஜிநாமா செய்ததால் பாபு ராஜேந்திர பிரசாத் ராஷ்டிரபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ராஷ்டிரபதியைத் தேர்தெடுக்கும் அதிகாரம் அ. இ. கா. கமிட்டிக்குக் கிடையாதென்று நரிமன் முதலானோர் கூறினர். அவர்தம் கூற்று நிராகரிக் கப்பட்டது. பாபு ராஜேந்திர பிரசாத் காங்கிரஸ் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டார்.

'மகாத்மா காந்திக்கு ஜே !' என்ற கோஷம் ஒருபுறம். 'வெட்கம் ; வெட்கம்' என்ற கூக்குரல் மறுபக்கம். 'உங் களை நாங்கள் விரும்பவில்லை. உங்களைத் தலைவராக அங்கீ கரியோம்' என்று சிலர் கூறினர். பாபு ராஜேந்திர பிரசாத்

எழுந்து நின்றதும், ‘ வெட்கம் ; வெட்கம் ’ என்று சிலர் ஆர்ப்பரித்தனர். புதிய காரியக்கமிட்டி அங்கத்தவரின் பெயரைத் தலைவர் தெரிவித்தார். பண்டித ஜவஹரும், சுபாஷும் காரியக் கமிட்டியிலிருக்க மறுத்துவிட்டதாகத் தெரிவித்தனர். சரத் போஸ், சுபாஷ் ஆகிய இருவருக்கும் பதிலாக, டாக்டர் பி. ஸி. ராயும், டாக்டர் கோஷும் சேர்த்துக் கொள்ளப்பட்டிருப்பதாக அறிவித்தார். வெட்கம் ; வெட்கம் ’ என்று மக்கள் கூச்சலிட்டார்கள்.

## புதுக்காரிய கமிட்டி மெம்பர்கள்

(1) மௌலானா அபுல்கலாம் அசாது
(2) சரோஜனி நாயுடு
(3) சர்தார் படேல்
(4) சேத் ஜம்னுலால் பஜாஜ்
(5) ஜெயராம்தாஸ் தௌலத்ராம்
(6) அப்துல் கபார்கான்
(7) ஆசாரிய கிருபாலினி
(8) டாக்டர் பட்டாபி சீதாராமய்யா
(9) புலாபாய் தேசாய்
(10) சங்கரராவ் தேவர்
(11) ஹரிகிருஷ்ண மகப்
(12) டாக்டர் பி. ஸி. ராய்
(13) டாக்டர் பி. ஸி. கோஷ்

## தீர்மானங்கள்

காங்கிரஸ் ஸ்தாபனத்தைச் சுத்தம் செய்து சீர்திருத்தி அமைக்க ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. பண்டித நேரு, பட்டாபி, கிருபாலினி ஆகியோர் அக்கமிட்டியினராவர்.

கேன்யா இந்தியர் விஷயத்தில் இந்திய அரசாங்கம் போதிய சிரத்தை கொள்ளவில்லை யென்று கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

வங்கச் சிறையில் வாடும் அரசியல் கைதிகள் இன்னும் விடுவிக்கப்படாதது கண்டிக்கத்தக்கதென்றும், இவ்விஷயம் ஓர் அகில இந்தியக் கிளர்ச்சியாக்கப்படு மென்றும் ஒரு தீர்மான மூலம் தெரிவிக்கப்பட்டது.

யுத்தம்பற்றிக் கீழ்க்கண்ட தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

உலகிலே யுத்த நெருக்கடி தலைகாட்டுவதால் காங்கிரஸின் யுத்தக் கொள்கையை இக்கமிட்டி தேசத்தவருக்கு நினைப்பூட்டுகிறது. இந்திய மக்களின் அனுமதியின்றி, இந்திய மக்களை யுத்தத்திற்கு உபயோகித்துக் கொள்வதை எதிர்க்கக் கங்கணங்கட்டிக் கொண்டிருக்கிறது. ஏடனுக்குத் துருப்பு அனுப்பியதைக் கமிட்டி கண்டிக்கிறது. இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்தியமைக்கப் பிரிட்டிஷ் அரசாங்கம் முயல்வதைக் கமிட்டி அங்கீகரிக்கவில்லை. நெருக்கடியான நிலை நேருமாயின், அவ்வக்காலங்களில் கமிட்டி வகுக்கும் காரியங்களை நடத்திவைக்குமாறு மாகாண மந்திரிகளுக்குக் கட்டளையிடுகிறது.

மகாத்மா காந்திக்கும் ஸ்ரீ சுபாஷ் போஸுக்கும்

நடந்த

# கடிதப் போக்கு வரவு

I

25—3—39

அன்புள்ள மகாத்மாஜி !

காங்கிரஸ் காரியங்களைத் தடைப்படுத்தி வைப்பவ னென்று என்மீது பலர் குறை கூறினர். அவர்களுக்குப் பதில் கூறுமுகத்தான் யான் விடுத்துள்ள அறிக்கையைத் தாங்கள் கவனித்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். புதிய காரியக்கமிட்டி அமைப்பது ஒன்றுதான் நம்முன் நிற்கும் அவசரமான வேலை. அதைத் திருப்திகரமானதாக முடிக்க வேண்டுமானால் அதற்கு முன்பு சில விரிவான விஷயங்களை அலசி ஆராயவேண்டுவது அவசியமாகும். அவற்றை நான் சொல்கிறேன் :

(1) காரியக்கமிட்டி அமைப்பதுபற்றித் தங்கள் கருத் தென்ன ? அது ஒருமுகமான கருத்துள்ளவர் கொண்டதா யிருக்கவேண்டுமா ? அல்லது, காங்கிரஸிலுள்ள எல்லாக் கட்சியினரையுங் கொண்டதாயிருக்கவேண்டுமா ?

(2) காரியக் கமிட்டி ஒரே கருத்துள்ளவர் கொண்டதா யிருக்கவேண்டுமென்று தாங்கள் கூறினால் என் போன்றோர் ஒருபுறமும், சர்தார் படேல்போன்றோர் மறுபுறமுமாக ஒரே கமிட்டியில் அங்கம் வகிப்பது இயலாது.

(3) காங்கிரஸிலுள்ள பல்வேறு கட்சிகளின் பிரதி நிதிக் கமிட்டியாகக் காரியக் கமிட்டி இருக்கவேண்டுமென்று

தாங்கள் கருதினால் வெவ்வேறு கட்சிகளுக்கும் பிரதிநிதித்துவம் என்ன ?

தற்பொழுது காங்கிரஸுக்குள்ளே முக்கியமாக இரண்டு கட்சிகளிருக்கின்றன. அவையிரண்டும் அநேகமாக சரி சமமான பலங்கொண்டவை. தலைவர் தேர்தலின்போது எங்கள் பக்கம் பெரும்பாலோர் இருந்தனர். திரிபுரியிலே விஷயம் வேறு விதமாயிருந்தது. காரணம் சமதர்மக் கட்சியின் போக்கே யாகும். சமதர்மக் கட்சி நடுநிலை வகியாதிருப்பின் எவ்வளவு இடையூறுகள் இருந்தபோதிலும் எங்களுக்கே வெற்றி கிடைத்திருக்கும்.

(4) காரியக் கமிட்டியில் எழுவர் பெயரை நான் குறிப்பிடுகிறேன். எழுவர் பெயரை சர்தார் குறிப்பிடட்டும்.

(5) மேலும், நான் காங்கிரஸின் தலைவனாயிருந்து காரியங்களை ஒழுங்குபெற நடத்தவேண்டுமானால் பொதுக் காரியதரிசியை நானே நியமித்துக்கொள்ளவேண்டும்.

(6) பொருளாளர் பெயரை சர்தார் குறிப்பிடட்டும்.

இப்பொழுது பண்டித பந்த் தீர்மானத்தில் ஓர் அம்சத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறேன். அது என்மீது கொண்டுவரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானம் என்று தாங்கள் கருதுகிறீர்களா ? நான் எனது பதவியை ராஜிநாமா செய்ய வேண்டுமென்று தாங்கள் விரும்புகிறீர்களா ? இத்தீர்மானத்தை ஆதரித்தவர் பலர், பலவிதமாகப் பொருள் விளக்கம் செய்ததனால் நான இப்படிக் கேட்கிறேன். பண்டித பந்த் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட பிறகு, தலைவரின் உண்மையான நிலையாது? காங்கிரஸ் சட்டம் 15-வது விதி, காங்கிரஸ் தலைவருக்குச் சில அதிகாரங்களைக் காரியக் கமிட்டி நியமன விஷயமாக அளித்திருக்கிறது. அந்த விதி இன்றுவரை திருத்தப்படாமலிருக்கிறது. பண்டித பந்த் தீர்மானம் என்ன சொல்கிறது ? தங்கள் (மகாத்மா) இஷ்டப்படி காரியக்கமிட்

டியை நியமிக்கவேண்டுமென்று கூறுகிறது. விளைவு என்ன? காரியக் கமிட்டியினரைத் தாங்கள் நியமனம் செய்வதும், நான் அதை வெளியிடுவதுதானு? பண்டித பந்தின் தீர் மானம் செல்லுபடியாகாது என்று நான் சொல்லுகிறேன். இதை நான் காங்கிரஸ் மகாநாட்டிலேயே நிராகரித்திருப் பேன். ஆனால் நான் நிரம்பவும் ஜனநாயகவாதி. மேலும் எனக்கு எதிரான தீர்ப்பு வருங்காலத்தில் சட்டத்தின்கீழ் ஒளிய எனக்கு இஷ்டமில்லை.

எல்லா இடையூறுகளையும் தடைகளையும் பொருட்படுத் தாது நான் தலைவனாயிருந்தால் எப்படியிருக்க வேண்டு மென்று தாங்கள் விரும்புகிறீர்கள்? நான் வெறும் பொம் மைத் தலைவராயிருக்கக் கூடாதென்று தாங்களே சென்ற வருடம் கூறியிருக்கிறீர்கள். இப்பொழுதும் அப்படியே கூறுவீர்களா? திரிபுரிக்குப்பிறகு எவ்வளவோ சம்பவங்கள் நிகழ்ந்திருப்பினும் இன்னும் ஒத்துழைப்புக்கு இடமிருக் கிறது.

— சுபாஷ்

## II

24—3—39

அன்புள்ள சுபாஷ்

அலகாபாத்தில்தான் முதன் முதலாக நான் பண்டித பந்தின் தீர்மானத்தைக் கண்டேன். அது விளக்கமாயிருக் கிறது. தலைகொடுத்துக் காரியத்தை நடத்தவேண்டிய பொறுப்பு தங்களது. தேசிய காரியத்தைக் கவனிப்பதற் குத் தாங்கள் எவ்வளவு தூரம் தகுதியுடனிருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. முடியாவிடில் ஸ்தாபன முறைப்படி எது உசிதமோ அதைச் செய்வதே சால் புடைத்து.

— பாபு

## III

29—3—39

**அன்புள்ள மகாத்மாஜி!**

தங்களது கடிதம் கிடைத்தது.......இரண்டு கட்சியினரும் சென்ற கால சம்பவங்களை மறந்து, மறுபடியும் வேலை செய்ய முடியுமா என்பதே கேள்வி. அது தங்களைப் பொறுத்ததாயிருக்கிறது. தாங்கள் எக்கட்சியும் சாராது நடுநிலை வகித்தால் காங்கிரஸையும் காக்கலாம்; தேசத்தில் ஒற்றுமையையும் உண்டுபண்ணலாம். நான் எதையும் மனத்திற்குள் வைத்து வஞ்சம் தீர்க்கும் சுபாவம் உள்ளவனல்லன். குத்துச்சண்டை செய்பவனைப்போல் மனம் படைத்தவன் யான். பந்தய முடிவில் வரும் பலாபலனை மகிழ்வுடன் ஏற்கும் மனம் படைத்தவன்.

பந்த் தீர்மானம் காங்கிரஸால் நிறைவேற்றப்பட்டுள்ளமையின் அதை நடத்திவைக்கக் கடமைப்பட்டுளேன். சட்டப்படி செல்லாதபோதிலும் அதை விவாதத்துக்கு அனுமதித்த யான் அதை நிறைவேற்றாது, எப்படி யிருக்க முடியும்?

தங்கள்முன் இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று காரியக் கமிட்டி அமைப்பது சம்பந்தமாக எனது கருத்துக்கும் இடமளிப்பது; மற்றொன்று தங்கள் கருத்துப்படி நடப்பது. தங்கள் கருத்துப்படி நடந்தால் நாம் இருவரும் ஒன்று சேரும் வகையில்லை. காரியக் கமிட்டி அமைப்பதுபற்றி என்னுல் முடிந்த எல்லாவற்றையும் செய்வதற்கு நான் சித்தமாயிருக்கிறேன்.

பண்டித பந்தின் தீர்மானப் பிரதி ஒன்று தங்களுக்கு அனுப்பப்படவில்லை யென்று கேட்டு ஆச்சரியமடைந்தேன்! அலகாபாத்துக்கு வரும்வரை தங்களுக்கு இது விஷயமே தெரியாதென்று கேட்க அதியாச்சரியப்படுகிறேன்!

திரிபுரியிலே இந்தத் தீர்மானத்துக்குத் தாங்கள் பரிபூரண ஆதரவு அளித்ததாகக் கூறப்பட்டதே! நாங்கள் திரிபுரியில் இருந்தபொழுது அதுபற்றிய அறிக்கையொன்றும் பத்திரிகைகளில் வெளியாயிற்றே!

பதவியில் ஒட்டிக்கொண்டிருக்க வேண்டுமென்ற ஆசை எனக்குச் சிறிதும் கிடையாது. நான் உடல் நோயாயிருப்பதால் பதவியை ராஜிநாமா செய்தல் வேண்டுமென்பது ஒரு காரணமாகவே எனக்குத் தோன்றவில்லை. சிறையிலே இருந்தபொழுது எந்தத் தலைவரும் பதவியை ராஜீநாமா செய்யவில்லை. நான் பதவியை ராஜீநாமா செய்ய வேண்டுமென்று நெருக்கப்படுகிறேன். நான் அதை எதிர்த்துவருகிறேன். ஏனெனில், காங்கிரஸ் அரசியலில் எனது ராஜிநாமாவினால் புதியசாயல் ஒன்றுதோன்றும். அதைத் தவிர்க்க நான விரும்புகிறேன்.

— சுபாஷ்

## IV

30—3—39

அன்புள்ள சுபாஷ்,

பண்டித பந்தின் தீர்மானம் ஸ்தாபன விரோதமானது, சட்டப்படி செல்லாதது என்று தாங்கள் கருதுகிறபடியால் தங்கள் வழி விளக்கமாயிருக்கிறது. கமிட்டியில் தாங்கள் நியமிக்கும் பெயருக்கு எதிர்ப்பிராது. ஆகவே தாங்கள் எழுப்பிய பற்பல கேள்விகளுக்குப் பதில் தேவையில்லை.

பிப்ரவரி மாதத்தில் நாம் சந்தித்ததிலிருந்து அடிப்படையான கொள்கையிலே நம் இருவருக்கும கருத்து வேற்றுமை இருக்கிறபடியால் பிரதிநிதிக் காரியக்கமிட்டி கெடுதலே உண்டுபண்ணும் என்பது எனது கருத்து. தங்கள் கொள்கை முறைக்கு அ. இ. கா. கமிட்டியில் பெரும்பாலார் ஆதரவு இருப்பதாகக் கொண்டால் தங்களுக்கு ஒத்தவரைக்

கொண்டு காரியக்கமிட்டி அமைப்பதே நலம். தாங்கள் தலைவராயிருக்க வேண்டுமானால் தங்களுக்குச் சுதந்திரம் வேண்டுவது அவசியமே. காந்தியர்கள் தங்கள் காரியத்தில் குறுக்கிட்டு இடையூறு உண்டுபண்ணமாட்டார்கள் ; முடிந்த சமயங்களில் அவர்கள் தங்களுக்கு உதவிபுரிவார்கள் ; முடியாதவிடத்தில் ஒதுங்கிவிடுவார்கள். அவர்கள் பெரும்பாலாராயிருக்கிறோரே என்று கவலைப்படவேண்டாம். காங்கிரஸ் ரிஜிஸ்டரில் பொய்யான அங்கத்தவர் பதிவு அதிகம் இருக்கிறது. ஆகவே பெரும்பாலார் சிறுபான்மையர் என்கிற பதத்துக்கு அர்த்தமேயில்லை. மேலும் நமக்குள்ளே நம்பிக்கையில்லை. நம்பிக்கையில்லாத இருவர் கூடிக் காரியம் புரிய முடியாது.

— பாபு

## V

31—3—39

அன்புள்ள மகாத்மாஜி

......................................................நம்மிடையே பிளவுண்டாகுமானால் காங்கிரஸில் உட்கலகம் ஏற்படும். அதனாலே காங்கிரஸுக்குப் பலவீனம் ஏற்படும். பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு நன்மை யுண்டாகும். இந்த மாதிரியான ஆபத்திலிருந்து காங்கிரஸையும் தேசத்தையும் காக்கக்கூடிய சக்தி தங்களிடமிருக்கிறது. பல காரணங்களால் சர்தார் படேலையும் அவர் கம்பெனியையும் வெறுக்கும் - வெறுப்பவர் பலர் தங்கள்மீது இன்னமும் அபார நம்பிக்கை கொண்டுள்ளனர். அவர்கள் தங்களைத் தேசிய உடைமையாகக் கருதிவருகிறார்கள் ; கட்சிகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவரென்று கருதுகிறார்கள். அந்த நம்பிக்கையானது எக்காரணத்தாலாவது குலையுமானால், நம்மையும், காங்கிரஸையும் கடவுள் காப்பாராக!

காங்கிரஸுக்குள்ளிருக்கும் இருகட்சிக்கு மிடையில் பெரும் பிளவிருக்கிறதென்பதை யாரும் மறுக்கமுடியாது. அந்தப் பிளவை இப்பொழுதேகூடப் போக்கிவிடலாம். அது தங்களால் ஆகக்கூடியதே. அரசியலில் எங்களை எதிர்ப்பவர் மனோபாவம்பற்றி நான் எதுவுங் கூறுதல் முடியாது. திரிபுரியிலே யிருந்த அனுபவமடைந்தோம். நாங்கள் சென்ற நிகழ்ச்சிகளை மறக்கவும், மன்னிக்கவும் தயாராயிருக்கிறோம். இந்தியாவின் அபிவிருத்திக்காக ஒன்றுபடத் தயாராயிருக்கிறோம். நாங்கள் என்று நான் பேசும் பொழுது காங்கிரஸ் சமதர்மக் கட்சியை நான் சேர்க்கவில்லை. காங்கிரஸ் சமதர்மக் கட்சிக்குச் சிலரேயுளர் என்பதை நாங்கள் திரிபுரியில் கண்டுகொண்டோம். சமதர்மக் கட்சித் தலைவரின் வெளவால் கொள்கை கண்டு பல கிளைகள் பிரிந்துவிட்டன. எதிர்காலத்தில் சமதர்மக் கட்சியினர் பலர் நம்மிடை கலப்பர். இதுபற்றிச் சந்தேகமுண்டானால் காலப் போக்கில் தெரியலாகும்.......நான் திரிபுரியிலிருந்து கிளம்பியபொழுது சென்ற பத்தொன்பது வருஷத்தில் இல்லாத வெறுப்புக்கொண்டேன்.............

பண்டித பந்த் தீர்மான விஷயமாகத் திரிபுரியில் ஒரு விஷயம்சொல்லப்பட்டது. ராஜ்கோட்டையிலிருந்த தங்களுடன் இதுபற்றி டெலிபோன் மூலம் சம்பாஷணை நடந்ததென்றும், தாங்கள் பரிபூரணமாக அத்தீர்மானத்தை ஆதரிக்கிறீர்கள் என்றும் சொல்லப்பட்டது. இச்செய்தி பத்திரிகைகளிலும் வெளியாயிற்று. இந்தமாதிரியான செய்திகளை நான் நம்புவதில்லை. எனினும், ஆதாரவு தேடுவதற்கு இது உபயோகமாயிருந்தது. பந்த் தீர்மானத்தைச் சர்தார் படேல் முதன் முதலாக என்னிடம் காட்டியபொழுது சில திருத்தங்கள் செய்தால் அதைக் காங்கிரஸ் ஏகமனதாக நிறைவேற்றுமென்று கூறினேன். திருத்தப்படவேண்டிய விதமும்

சர்தாருக்கு அனுப்பப்பட்டது. ஆனால் அவர் ஏதும் பதில் கூறவில்லை. அந்தத் தீர்மானத்திலே ஒரு கமாகூட மாற்றக் கூடாதென்ற எண்ணம்போலும்! ராஜ்குமாரி அமிர்தகௌரி அந்தத் தீர்மானத்தைத் தங்களுக்குக் காட்டியிருத்தல் கூடுமென்று கருதுகிறேன். தங்கள் தலைமையிலும், கொள்கையிலும், ஆலோசனைகளிலும் நம்பிக்கையிருப்பதைக் காட்டுவதாயிருப்பின் அது திருத்தப்பட்ட தீர்மான முறையில் தெளிவாக விளங்குகிறது. தலைவர் தேர்தலை வஞ்சம் தீர்ப்பதாயிருப்பின் திருத்தப்பட்ட தீர்மானம் போதாதுதான்!

பண்டித பந்தின் தீர்மானம் தங்கள் கௌரவத்தை எப்படி அதிகப்படுத்தியது என்பதுதான் எனக்குத் தெரியவில்லை. விஷயாலோசனைக் கமிட்டியிலும் காங்கிரஸ் மகாநாட்டிலும் தங்களுக்கு விரோதமாக 135 ஓட்டுகள் அளிக்கப்பட்டன. பிறர் என்ன சொல்லிய போதிலும் எனக்குத் தெரிந்தவரையில் 2200 பேரில், காங்கிரஸ் சமதர்மக் கட்சியின் நடுநிலை நீங்க, 800 பேர் தங்களுக்கு எதிராக வாக்களித்தனர். விஷயாலோசனைக் கமிட்டியில் பந்த் தீர்மானத்தை எதிர்த்ததுபோல், காங்கிரஸ் சமதர்மக்கட்சி காங்கிரஸ் பந்தலிலும் எதிர்த்திருக்குமானால் அந்தத் தீர்மானம் தோல்வியுற்றிருக்கும். தீர்மானத்தில் சில திருத்தங்கள் செய்திருந்தால் தங்களுக்கு எதிராக ஒரு ஓட்டுகூட விழுந்திராது. பிரிட்டிஷ் அரசாங்கத்தின்முன் தங்கள் கௌரவமும், 'குபீ' ரென்று உயர்ந்திருக்கும். அதற்குப் பதிலாக எங்கள்மீது வஞ்சம் தீர்த்துக்கொள்வதற்கு எண்ணங் கொண்டவர்கள் தங்கள் பெயரையும், கௌரவத்தையும் உபயோகித்துக்கொண்டார்கள். தங்கள் கௌரவத்தை அதிபாதாளத்தில் அழுத்திவிட்டார்கள். ஏனெனில் தங்கள் சிஷ்யர்கள் எப்படியோ பெரும்பான்மை பெற்றாலும்

உள்ளுக்குள்ளேயே பலமான எதிர்ப்பிருக்கிற தென்பதை உலகம் முழுவதும் அறிந்துகொண்டது.

இந்த மாதிரியே காரியங்கள் நடக்குமாறு விட்டுக் கொண்டே போனால் இந்த எதிர்ப்பு பலம்பெறும். தீவிர சக்திகளைக்கொண்டு எதிர்காலத்தில் எழும் கட்சி எத் தகையதா யிருக்கும் !

அப்புறம் நம்முடைய திட்டமென்ன? பூரண சுயராஜ்யக் கோரிக்கையை நாம் வற்புறுத்த வேண்டுமென்று நான் விரும்புகிறேன். எங்களைப் போன்ற திடநம்பிக்கை உங்களுக் கில்லை. தாங்கள் காங்கிரஸில் ஊழல் மலிந்து விட்ட தாகக் கூறுகிறீர்கள். மேலும் பலாத்காரம் என்ற பொய் யான பயம் தங்களைக் கவ்விக் கொண்டது. காங்கிரஸில் அதிக ஊழல் இருக்கிறது. அதை ஒழிக்க வேண்டுவதே. ஆனால் முன்புபோல அவ்வளவு பலாத்காரம் தற்பொழுது காங்கிரஸில் இல்லை.

ஆகவே, நாம் சீக்கிரமாகப் பிரிட்டனுக்கு எச்சரிக்கை செய்யவேண்டும். தங்களுக்கும் பண்டித ஜவாஹருக்கும் இது பிடிக்கவில்லை. ஆனால் தங்கள் வாழ்விலே எவ்வளவோ அதிகாரிகளுக்கு எச்சரிக்கை யளித்திருக்கிறீர்கள். ராஜ கோட்டையிலும் இதே மாதிரிதான் செய்தீர்கள்.

ஆகவே, எச்சரிக்கை செய்வதில் தவறு என்ன ? அவ்வாறு செய்து நாட்டைப் போராட்டத்துக்குப் பண் படுத்துவீர்களானால் நாம் சீக்கிரத்தில் சுயராஜ்யம் பெறுதல் கூடும். நாம் தைரியமாக முன்னேறிச் சென்றால் 18 மாதங் களில் சுயராஜ்யம் பேறல் கூடும்.

இதிலே நான் உறுதியாயிருக்கிறேன். எத்தகைய தியாகமும் செய்யச் சித்தமாயிருக்கிறேன். தாங்கள் போராட்டத்தை நடத்தினால் நான் மகிழ்வுடன் உதவுவேன். வேறு ஒரு தலைவர் இருந்தால் போராட்டத்தை நன்கு

நடத்த முடியுமென்று தாங்கள் கருதினால் நான் மகிழ்ச்சியோடு விலகிக்கொள்கிறேன். இந்த நிமிஷத்திலே காங்கிரஸ் சுயராஜ்யப் போரை நடத்தவேண்டும் என்பதுதான் எனது கோரிக்கை.

தாங்கள் சமஸ்தானப் போராட்டத்தை நடாத்தும் விதம் எனக்குப் பிடிக்கவில்லை. மன்னியுங்கள். ராஜ்கோட்டைக்காகத் தங்கள் உயிரை இழக்கத் தீர்மானித்தீர்கள். ராஜ்கோட்டை மக்களுக்காகப் போராடும் பொழுது இதர சமஸ்தானங்களில் நடக்கும் போராட்டங்களை நிறுத்தினீர்கள். ஏன் அம்மாதிரி செய்யவேண்டும்? இந்தியாவிலே அறுநூற்றுக்கு மேற்பட்ட சமஸ்தானங்கள் இருக்கின்றன. அவற்றில் ராஜ்கோட்டை ஒரு சுண்டைக்காய். தேசம் எங்கும் போராட்டத்தை ஒருதிட்டம் வகுத்து ஏன் நடத்தக் கூடாது? நாட்டு மக்களில் இலட்சக் கணக்கினர் இவ்வாறுதான் நினைக்கின்றனர். ஆயினும் தங்கள்பேரிலுள்ள மரியாதைக்காக அதை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை.

ராஜ்கோட் தீர்ப்புப்பற்றி என்போன்ற பலர் சந்தோஷப்படுவதில்லை. நாமும், தேசியப் பத்திரிகைகளும் அதைப் பெரிய வெற்றியென்று கூறின. ஆனால் நாம் பெற்ற லாபமென்ன? ஸர் மாரிஸ் க்வயர் நமது மனிதரா? அல்லது நடுநிலை வகிக்கும் ஒருவரா? அவர் அரசாங்க மனிதர். அவரைத் தீர்ப்புக்கூற ஏற்படுத்துவது என்ன நியாயம்? அவர் தீர்ப்பு நமது சார்பிலிருக்குமென்று கருதுகிறோம். நமக்கு எதிராகத் தீர்ப்பு அளிக்கிறாரென்றும் வைத்துக் கொள்வோம். நமது நிலை யாதாம்? மேலும் ஸர் மாரிஸ், நாம் எதிர்க்கும் சமஷ்டி புருஷரல்லவா? வைஸிராயுடன் பேசிய பிறகு தாங்கள் ஏன் டில்லியில்

தங்கவேண்டுமென்பது பலருக்குத் தெரியவில்லை. ஆனால் தாங்கள் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுக்கும் பிறருக்கும் அதிக மகத்துவம் அளித்துக் கௌரவப்படுத்துகிறீர்கள்.

— சுபாஷ்

## VI

2—4—39

அன்புள்ள சுபாஷ்!

தாங்கள் தெரிவிக்கும் கொள்கைகள் எனது கொள்கைக்கு நேர்மாறானவையா யிருக்கின்றன. இவ்விரண்டையும் ஒன்று சேர்க்கமுடியுமென்று எனக்குத் தோன்றவில்லையே! ஒவ்வொரு கொள்கைக்காரரும் எவ்விதமான கலப்புமின்றித் தங்கள் கொள்கையைத் தேசத்தின்முன் சமர்ப்பிக்க வேண்டுமென்று நான் கருதுகிறேன். இக்காரியம் நேர்மையான முறையில் செய்யப்படுமேல் மனத்தாங்கலோ உட்கலகமோ ஏற்படவேண்டியதில்லையே!

இப்பொழுதுள்ள தவறு என்ன? நம்மிருவருக்கும் கருத்து வேற்றுமை யிருப்பதன்று; ஆனால் பரஸ்பர நம்பிக்கையும் மரியாதையும் இன்மையே. காலதேவனே இதனைத் தீர்க்கும் சீரிய மருத்துவனாவான். நம்முள்ளே உண்மையாகவே அஹிம்ஸை யிருக்குமாயின் உட்கலகமோ மனத்தாங்கலோ ஏற்படா. இவற்றையெல்லாம் நன்கு ஆய்ந்தே உடனே தங்கள் கொள்கைக்கு ஒத்துழைக்கும் காரியக்கமிட்டியினை யமைத்துத் தங்கள் திட்டத்தை அ. இ. கா. கமிட்டிமுன் சமர்ப்பித்தல் வேண்டுமென்று கருதுகிறேன். அத்திட்டத்தைக் கமிட்டி ஏற்றுக்கொள்ளுமானால் எல்லாம் நன்கு நிறைவேறும். தங்கள் திட்டத்தை அ. இ.கா. கமிட்டி ஏற்கவில்லையாயின் தாங்கள் பதவியை ராஜிநாமா செய்தல் வேண்டும். கமிட்டி தன் இஷ்டம்போல் தலைவரைத் தெரிந்தெடுத்துக் கொள்ள இடமளிக்கவேண்டும். தங்கள் விருப்பம்

போல் தேசமக்களுக்கு அறிவு புகட்டித் தாங்கள் சுதந்திர முடையவர்கள் ஆவீர்கள்.

பண்டித பந்த் தீர்மானம் வந்தகாலத்தில் நான் படுத்த படுக்கையா யிருந்தேன். ராஜ்கோட்டையில் இருந்த மதுர தாஸ், ஒரு நாள் காலை, 'பழைய குதிரை'கள்மீது நம்பிக்கை யிருப்பதாக ஒரு தீர்மானங் கொண்டு வரப்பட்டிருக்கிற தென்று தெரிவித்தார். தீர்மானம் முழுவதும் எனக்குக் கிடைக்கவில்லை. தீர்மானம் இருக்கும் ரீதியில் நல்ல தென்றே நான் கூறினேன். ஏனெனில் தேர்தலானது பழங் குதிரைகளான சர்தார் கம்பெனிமீது நம்பிக்கையில்லை யென்று தெரிவிக்கக்கூடிய அளவில் தங்கள்மீது நம்பிக் கையைக் காட்டிக் கொள்வதாயில்லையென்று சிவகிராமத்தில் நான் அறிவிக்கப்பட்டேன்.

இதன் பிறகு அலகாபாத்தில் மௌலானு ஆசாத்தைக் காணச் சென்ற பொழுதுதான் அசல் தீர்மானத்தை நான் பார்த்தேன்.

தற்பொழுதுபோலத் தேசம் எக்காலத்திலும் சாத்விக மாயிருந்ததில்லையென்று தாங்கள் கூறுகிறீர்கள். நான் அதனின்றும் மாறுபாடான அபிப்பிராயங் கொள்கிறேன். நான் சுவாசிக்கும் காற்றிலே பலாத்காரத்தை நுகர்கிறேன். நம் மிருவருக்குள்ளிருக்கும் அவநம்பிக்கையே பலாத்காரத்தில் மோசமான அம்சம். ஹிந்து முஸ்லிம் வேற்றுமை அதிகரிப்பதும் பலாத்காரமே. இன்னும் எவ்வளவோ சொல்லிக் கொண்டே போவேன்.

காங்கிரஸில் ஊழல் மலிந்திருப்பதுபற்றி நாம் இருவரும் கருத்து வேற்றுமை கொண்டிருப்பதாகத் தெரிகிறது. காங்கிரஸில் ஊழல் அதிகரித்திருக்கிறது என்பதே எனது அபிப்பிராயம். இந்த ஊழலைத் தகைதல்

வேண்டுமென்று பல மாதங்களாகவே நான் வற்புறுத்தி வருகிறேன்.

இந்த மாதிரியான சந்தர்ப்பத்தில் அஹிம்ஸா முறையில் போராட, நாடு தகுதியில்லையென்று நான் கருதுகிறேன். போதுமான பக்கபலமின்றி எச்சரிக்கை செய்வது மிகவும் பயனற்றதும், மோசமானதும் ஆம்.

ஆனால் முன்பு சொன்னபடி நான் கிழவன். மேலும் அதிக ஜாக்கிரதையுடன் இருப்பவன். தாங்கள் இளைஞர். தன்னம்பிக்கையும், தளராத ஊக்கமும், முயற்சியும் உள்ளவர். தாங்கள் சொல்வது சரி; நான் சொல்வது தவறு தான் என்று கருதுகிறேன். இன்றைய நிலையில் காங்கிரஸ் சத்தியாக்கிரகத்தைத் திறம்பட நடாத்துதல் இயலாது.....

தாங்கள் ராஜகோட்டை விஷயமாகக் குறிப்பிட்டிருப்பது கண்டு மகிழ்கிறேன்........நாம் நமது அபிப்பிராய பேதங்களை விவாதித்த போதிலும் நமது தனிப்பட்ட சம்பந்தம் மங்காதென்று கருதுகிறேன்.

— பாபு.

## VII

## தந்தி

நம் இருவரும் வெவ்வேறு கருத்துள்ளவரா யிருக்கிறோம். தங்கள் கொள்கைக்கு ஆதரவான காரியக் கமிட்டியை உடனே அமைத்துக்கொள்க. தங்கள் கொள்கையையும் திட்டங்களையும் அ. இ. கா. கமிட்டி முன் சமர்ப்பிக்கத் தங்களுக்குப் பெரும்பான்மை ஆதரவிருப்பின் தங்கள் திட்டத்தை நிறைவேற்றலாம்; பெரும்பான்மை ஆதரவு கிடைக்காவிடில் தாங்கள் பதவியை ராஜீநாமா செய்யவேண்டும்.

அ. இ. கா. கமிட்டி புதிய தலைவரைத் தேர்ந்தெடுக்க இடமளிக்கவேண்டும். உட்கலகங் கண்டு யான் பயப்படுகிறவனல்லன்.

— பாபு.

## VIII

அன்புள்ள மகாத்மாஜி

காரியக்கமிட்டி நியமனம் பற்றித் தாங்கள் கூறியுள்ள யோசனையை நான் தீவிரமாக ஆலோசித்து வருகிறேன். ஒற்றுமை நம்பிக்கையை அது அறவே ஒழிப்பதாயிருக்கிறது. அது காங்கிரஸில் பிளவில்லாமல் செய்யாது. தற்போதைய நிலையில் ஒன்றுபட்ட காரியக்கமிட்டியை நியமிப்பது இருகட்சியையும் பிரிந்து நிற்கச்செய்வதாகும். அது கோரமான பொறுப்பல்லவா ? சேர்ந்து செயல் புரிவது இயலாத காரியம் என்று தாங்கள் கருதுகிறீர்களா ? நாங்கள் அப்படி நினைக்கவில்லை. நாங்கள் சென்றகால நிகழ்ச்சிகளை மறந்துவிடவும், மன்னிக்கவும், பொது நன்மைக்காகச் சேர்ந்து செயல் புரியவும் சித்தமாயிருக்கிறோம். ஹரிபுரத்திலே காரியக் கமிட்டியில் அங்கம் வகிக்குமாறு நான் சமதர்மிகளை அழைத்தபொழுது தாங்கள் அதற்கு ஆதரவு அளிப்பதாகக் கூறினீர்கள். தற்பொழுது ஒன்றுபட்ட காரியக்கமிட்டி வேண்டுமென்று கூறத் தக்க விதமாக நிலைமை ஏதாவது மாறிவிட்டதா? தாங்கள் நம்மிருசாராரும் எதிரிடையானவர் என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். நமது எதிர்ப்பு தத்துவத்தின்பாற்பட்டதா அல்லது தனிமனிதரின் பாற்பட்டதா என்பது விளங்கவில்லை. தனிப்பட்ட மனிதர் இன்று நாளை அழியக்கூடியவர்.

நாம் இருவரும் சண்டைபோடலாம். ஆயினும் ஒன்று சேர்ந்து கருத்து வேற்றுமைகளைக் களைதலுங்கூடும். சுய ராஜ்யக் கட்சியினரை உதாரணமாகக் கூறுகிறேன். எதிர்ப்புக்குப் பிறகு பண்டித மோதிலால், தேசபந்து ஆகியோருக்கும் தங்களுக்குமுள்ள தொடர்பு நெருங்கியது. நெருக்கடியான சந்தர்ப்பங்களில் இங்கிலாந்திலே மூன்று கட்சிகள் ஒரே மந்திரி சபையில் அங்கம் வகிக்கலாம். பிரான்ஸ் முதலிய தேசங்களிலும் பலசரக்கு மந்திரிசபைதான். நாம் என்ன, பிரிட்டிஷ்காரர், பிரெஞ்சுக்காரரைவிட தேசபக்தியில் குறைந்தவரா? நாமும் ஏன் அம்மாதிரியான மந்திரி சபை அமைத்துக்கொள்ளக் கூடாது? நம்மிருவருடைய வேற்றுமையும் தனி மனிதரைப் பற்றியன்று, தத்துவத்தைப் பொருத்ததுதான் என்று தாங்கள் கூறினால் ஒரு விஷயம் கேட்கிறேன். தத்துவங்களில் எங்கு எங்குத் தாங்கள் மாறுபடுகிறீர்கள்? கூடிக் காரியம் நிறைவேற்ற முடியாதபடி அடிப்படையாக நீங்கள் மாறுவது எங்கே?

பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு எச்சரிக்கை செய்வது பற்றித் தாங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அஹிம்ஸை சரியாக நிலவவில்லை யென்று குறிப்பிடுகிறீர்கள். ஆனால் ராஜ்கோட்டையில் அஹிம்ஸா முறையில் பொதுஜனக் கிளர்ச்சியை நடத்தவில்லையா? இந்த சமஸ்தான மக்கள் சத்தியாக்கிரகத்திலே பயிற்சியடையாதவர்கள். இவர்களே அஹிம்ஸா முறையில் போர்புரிய முடியுமானால் சத்தியாக்கிரக முறையில் பண்பட்ட பிரிட்டிஷ் இந்திய மக்களும் ஏன் போராடக் கூடாது..............

அதன் பிறகு திரிபுரியிலே நிறைவேற்றப்பட்ட தேசியக் கோரிக்கைத் தீர்மானத்தை எடுத்துக்கொள்ளுங்கள். இதை

நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா? ஒப்புக்கொண்டால் இன்னும் ஒருபடி என் முன்னேறிச் சென்று என் திட்டத்தை ஏற்றுக்கொள்ளலாகாது? ............................

தாங்கள் நேரடியாகக் காங்கரஸில் தலைமை வகித்து நடத்துங்கள். இன்றேல் சுதந்திரப் போரைத் துவக்குங்கள். எதிர்ப்பெல்லாம் ஒழிந்துபோம்.

— சுபாஷ்

---

இந்தவிதமாகக் காங்கரஸுக்குள் ஏற்பட்ட அமளி ஒருவாறு தணிந்தது. காந்தி - சுபாஷ் கடிதங்கள் இவ்விருவரும் எவ்வளவு தூரம் மாறுான கேந்திரங்களில் இருக்கிறார்கள் என்பதைக் காட்டுகின்றன. இனிக் காங்கிரஸ் சகடம் நன்கு ஓடுமென்று எதிர்பார்ப்போமாக. !

வந்தே மாதரம்





# தமிழ் நாட்டுச் சிறு கதைகள்

## தொகுதி I



வ. வே. சு. ஐயர்

இயற்றிய

தித்திக்கும் அரிய கதைகள்

'மங்கையர்க்கரசியின் காதல்' முதலியவை

— சீர்திருத்திய புதிய பதிப்பு —

இந்நூலைப்பற்றிய சிறப்புரையில், இப் பெரியாரையும், இவரது உயர்ந்த நூல்களையும்பற்றி, (சென்னை அரசாங்க முதல் மந்திரி) கனம் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் எழுதுவதைப் படியுங்கள்.

" * நமது பொதுவாழ்வு நல்ல நிலையை அடைந்து நாடு சுகமும், கௌரவமும் பெறவேண்டின், மக்களுடைய நடை குணங்கள் உயர் வழிப்பட நாம் முயற்சி செய்யவேண்டும். பாலியப் பருவத்தில் எண்ணமும், ஒழுக்கமும், நல்வழியில் அமையச் செய்ய **வ. வே. சு. ஐயரவர்கள்** எழுதியுள்ள **" சிறு கதைகள் "** போன்ற புத்தகங்களைப் படித்தல் நல்ல சாதனமாகும். இக்கதைகளை ஒருவன் படித்துப் புத்தகத்தைக் கீழே வைக்கும் காலத்தில், அவன் மனத்தில் பரிசுத்தமான உணர்ச்சிகளும், உன்னதமான எண்ணங்களும் ததும்பும்.

" * ஐயரவர்களின் தைரியத்தையும், தேசபக்தியையும், சத்தியத்தையும், பாராட்டும் ஒவ்வொருவரும் அவர் எழுதிய இக்கதைத் தொகுதிக்கு ஆதரவு அளிப்பார்களென எதிர்பார்க்கிறேன்."

| | |
|---|---|
| சாதாரணப் பதிப்பு | 0—12—0 |
| கலிகோ பயிண்ட் செய்தது | 1— 0—0 |

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை

# சந்தனக் காவடி

## முதலிய கதைகள்

### இந்நூலைப் பற்றிய சிறப்புரைகள்

**ஹனுமான் :**—இக் கதைகள் தமிழில் சிரஞ்சீவித் தன்மை பெறக்கூடியவை.

**தினமணி :**—எட்டுக் கதைகளும் வாசித்து அனுபவிக்கவேண்டியவையே.

**ஜெயபாரதி :**—இவைகள் சுத்த சுதேசிக் கதைகள்.

**பாரதமணி :**—நம் நாட்டு வாழ்க்கையின் அழகான அம்சங்களை ஆராய்ந்து இனிய நடையில் சித்திரங்கள் சிருஷ்டிசெய்யும் சக்தி பெற்றவர் தி. ஜ. ர என்பதற்கு இப்புத்தகத்தில் பரிபூரண அத்தாட்சி இருக்கிறது.

**சுதேசமித்திரன் :**—கதைகள் யாவும் ஸ்வாரஸ்யமாய்ப் பின்னப்பட்டிருக்கின்றன.

**ஊழியன் :**—தமிழர்கள் படிக்கவேண்டிய கதைகள்.

**குமரன் :**—நம் நாட்டு வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் இக் கதைகள், இனிய தெள்ளிய நடையில் எழுதப்பட்டிருக்கின்றன.

**ஹிந்துஸ்தான் :**—சிறப்பான தமிழ்க் கதைகள்.

**மணிக்கொடி :**—தி. ஜ. ர-வின் கதைகள் ஒவ்வொன்றும் ஓர் அழகிய உண்மை.

**கலைமகள் :**—ஒவ்வொன்றும் நெஞ்சை அள்ளும்படியாக அமைகின்றது. சுவை ததும்பும் அபூர்வ இலக்கிய சிருஷ்டிகள்.

**தாருல் இஸ்லாம்:**—உயிருள்ள இச் சிறுகதைகள் மூலம் இதன் ஆசிரியர் மனித வாழ்வையே சித்திரித்துள்ளதுடன், வாழ்வின் உயர்வைக் கதைகளின்மூலம் சமூகத்தினருக்குப் புலப்படுத்துகிறார்.

**சினிமா உலகம் :**—ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு தனிச் சுவையை அள்ளித் தருகின்றது.

**சித்ரவாணி :**—காடு முரடற்ற இலகுவான நடை ; தெளிவு நிறைந்த விகாசம் ; சிந்தனையைத் தூண்டும் கருத்துகள் ; இவை தாம் அவர் கதைகளுக்குள்ள விசேஷ யோக்யதைகள்.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

பாஞ்சால சிங்கம்

# லாலா லஜபதி ராய்

இது

ஸ்ரீ. எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்

இயற்றியது

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி தலைவரும், டெல்லி சட்டசபை அங்கத்தினருமான

ஸ்ரீ ஸி. என். முத்துரங்க முதலியார், பீ. ஏ., அவர்கள்

சிறப்புரையுடன் கூடியது

## பொருளடக்கம்



விலை அணு 6


அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை

# ஜவாஹர்லால் நேரு

(பல ஆப்டோன் படங்களுடன் கூடியது)

## பொருளடக்கம்




'தினமணி' ஆசிரியர்

ஸ்ரீ. டி. எஸ். சொக்கலிங்கம் அவர்கள்

இயற்றியது


சென்னை அரசாங்க முதல் மந்திரி

சக்கரவர்த்தி ஸ்ரீ ராஜகோபாலாசாரியாரவர்கள்

சிறப்புரை கொண்டது : : விலை அணா 8


அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை

# பாபு ராஜேந்திரப் பிரசாத்

ஸ்ரீ எம். எஸ். சுப்பிரமண்ய ஐயர் இயற்றியது

**ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி, எம். எல். ஏ., அவர்கள்**

**சிறப்புரை கொண்டது : : விலை அணு 4**

*விதர்ப்ப தேசத் தியாகி - சம்பாரான் சத்தியாக்கிரக வீரர் - மகாத்மாவின் அத்யந்த சீடர் - சாந்தமே உருவெடுத்த மகாபுருஷர் - பாரத நாட்டின் முடிசூடா மன்னர்*

## இவருடைய அரிய சரித்திரம்

### சில முக்கிய அபிப்பிராயங்கள்

**தாருல் இஸ்லாம் :—** * *இன்னமுதூட்டும் முறையில், உள்ளத்தை உற்சாகப்படுத்தும் வகையில், அடிமைகளை வீரர்களாக்கும் இசையில் எழுதப்பட்டிருக்கும் இந்நூலை, தமிழரனைவரும் படித்துப் பயனும் பெருமையும் அடைவார்களாக.*

* * *

**குமரன் :—** * *நல்ல புத்தகங்களை, தகுந்த ஆசிரியர்களைக் கொண்டு எழுதி வெளியிடும் தன்மையில் அல்லயன்ஸ் கம்பெனியார் சிறந்தவர்கள்.*

* * *

**சுதேசமித்திரன் :—** * * *அல்லயன்ஸ் கம்பெனியாரது ஊக்கம் மேன்மேலும் அதிகரிக்கும் வண்ணம் தமிழ் மக்கள் இப்புத்தகத்திற்கு ஆதரவளிப்பார்களென நம்புகிறோம்.*

* * *

**The Hindu :—** * A very readable sketch in Tamil of Babu Rajendra Prasad's life & career.

---

**அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை**

தியாகமூர்த்தி

பண்டித

# மோதிலால் நேரு

**33** - போட்டோ படங்களுடன்

—— அணு **12** ——

ஸ்ரீமான் வே. சாமிநாத சர்மா அவர்களால் அழகாய்த் தொகுக்கப்பட்டு, ' தமிழ் நாடு ' ஆசிரியர், டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு அவர்கள் சிறப்புரையுடன் கூடியது. ஒவ்வொரு தேச பக்தரிடமும், புத்தக சாலையிலும் அவசியம் இருக்கவேண்டிய நூல்

PRESS APPRECIATIONS

**பத்திரிகைகளின் புகழுரைகள்**

**சுதேச மித்திரன் :**—*பரம்பரையாகச் செல்வவந்தரா யிருந்து தமக்குள்ள எல்லாவிதச் சொத்தையும், குடும்பத்தினரையும் தேசத் துக்காக அர்ப்பணஞ் செய்த இவ்வீரரின சரித்திரம், இக்காலத்தில் பலரும் பின்பற்றக்கூடிய பாடத்தைக் கற்பிக்கும்படி எழுதப்பட் டிருக்கிறது.*

**ஊழியன் :**—*பண்டிதர் வாழ்க்கை வரலாறும் அவரது தளரா ஊக்கமும், அதிகார சக்தியும், மதிநுட்பமும் நிர்வாக சாமர்த்தியமும் மதிப்பரிய தியாகமும் நன்கு விளங்குமாறு இந்நூலில் தரப்பட் டிருக்கின்றன. **புத்தகத்தின் அமைப்புச் சிறப்பானது.** தமிழில் இத்தகைய ஒரு நூலின் தேவையையும் பயனையும் பற்றி எவ்வளவு எழுதினும் மிகையாகாது.*

**The Hindu :**—This interesting book which has a Foreword by Dr. Varadarajulu Naidu, **describes in clear detail** the early career of Pandit Motilal, his work in the Assembly, his success at the bar, and his unparalleled sacrifice to the country.

***தமிழ் நாடு :**—இப்புத்தகத்தில் அவருடைய ஜீவிய சரித்திரச் சுருக்கம் அடங்கியிருப்பதோடு, பண்டித நேருவின் பலவித படங் களும் மிளிர்கின்றன.*

---

**அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை**

சென்னை அரசாங்க முதல் மந்திரி

ராஜாஜி

இயற்றிய

# குட்டிக் கதைகள்

இந்நூலில் அடங்கியவை :—

(1) தேவானை
(2) அன்னையும் பிதாவும்
(3) திக்கற்ற பார்வதி
(4) ஜகதீச சாஸ்திரிகள் கனவு
(5) அறியாக் குழந்தை
(6) முகுந்தன்
(7) தீபாவளியில் தேவ தரிசனம்
(8) எலெக்ஷன் கதை
(9) சோதிடம் பொய்யாகுமா ?
(10) வேணுகானம்
(11) பட்டாசுக் கட்டு

நல்ல காகிதத்தில், பெரிய எழுத்துக்களில் அழகாய் அச்சிடப்பட்டது. உங்கள் பிரதிக்கு உடனே எழுதிக்கொள்க. விலை அணு **12**

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை

# காங்கிரஸ் சரித்திரம்

[ஸ்ரீ. எம். எஸ். சுப்பிரமணிய ஐயர் இயற்றியது.]

ஸ்ரீமதி ருக்மிணி லக்ஷ்மீபதி அம்மாள்
சிறப்புரையுடன்

**258** பக்கங்கள் தலைவர் படங்களுடன்கூடியது

*மலிவான பதிப்பு*
*உயர்ந்த காகிதத்தில் அச்சிட்டு, கலிகோ பயிண்டுடன் கூடியது.*

அணா **8** / ரூபா **1**

சில முக்கிய அபிப்பிராயங்கள்

**குமரன் :—***நல்ல நூலொன்றை இவ்வளவு குறைந்த விலையில் மிகச் சிரமப்பட்டு, நல்ல சந்தர்ப்பத்தில் வெளியிட்டிருக்கும் அல்லயன்ஸ் கம்பெனியார் அதிக நன்றிக்கு உரியவராவார்கள்.*

**குமாரவிகடன்:—***யாவரும் உணரச்சக்க மிக எளிய தமிழ் நடையில் இந்தியாவில் ஆங்கிலேயர் தோற்ற முதல், இன்றைய நடைமுறை வரையில், விளக்கமாகவும் விரிவாகவும் எழுதப்பட்டுளது.* **தமிழ்நாட்டு மக்கள் ஒவ்வோருவரும் விரும்பிப் பெற வேண்டிய நூல்களில்** *இதுவும் ஒன்றென்பது மிகையாகாது.*

**ஜயபாரதி :—***இனிமையான எளிய நடையில் இச்சரித்திரத்தை எழுதியுள்ளார். தமிழர் ஒவ்வொருவர் கையிலும் இப்புத்தகம் அவசியம் இருக்கவேண்டும்.*

**'தினமணி' ஆசிரியர், ஸ்ரீ டி. எஸ். சோக்கலிங்கம் அவர்கள், தம்முடைய முன்னுரையில் எழுதுவது :—** *முக்கியமான விஷயங்களை விடாமலும், தமிழர் சுலபமாயும் தெளிவாயும் அறியும் விதத்திலும், ஸ்ரீ. எம். எஸ். சுப்பிரமண்ய ஐயர் காங்கிரஸ் சரித்திரத்தை எழுதியிருக்கிறார். மிகவும் சொற்ப விலையில் இப்புத்தகத்தைப் பிரசுரிக்க அல்லயன்ஸ் கம்பெனியார் முன்வந்திருக்கிறபடியால், அவர்களுடைய எதிர்கால தேசிய வேலைக்கு ஊக்கங்கொடுக்கும் விதத்தில், இப்புத்தகத்தைத் தமிழர்கள் ஏராளமாய் வாங்கி ஆதரிப்பார்களென்று நம்புகிறேன்.*

**அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை**

லோகமான்ய

# பாலகங்காதர திலகர்

பல தேசீய நூல்களின் ஆசிரியர்

ஸ்ரீ. எம். எஸ். சுப்பிரமண்ய ஐயர்

*இயற்றியது*

சென்னை அரசாங்க விளம்பர மந்திரி

ஸ்ரீ. எஸ். இராமநாதன், பீ. ஏ., பி. எல்.,

அவர்கள் சிறப்புரையுடன் கூடியது

பொருளடக்கம்



—— அணா 8 ——

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை

பண்டித

# மதன் மோகன் மாளவ்யா

இது

## ஸ்ரீ எம். எஸ். சுப்பிரமண்ய ஐயர்

இயற்றியது

பார்லிமெண்டரி காரியதரிசி

ஸ்ரீ எம். பக்தவத்ஸலம், பி. ஏ., பி. எல். அவர்கள்

சிறப்புரையுடன் கூடியது

## பொருளடக்கம்



—— விலை அணா 6 ——


அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை